# கல்கி

ஸ்வீட்டா...ஸ்டைலா...ஸ்மார்ட்டா...




KALKI • 09.08.2009 • ரூ.10.00 • 96 பக்கங்கள்

## கடித சுகம்



- கலக்கல் கேர்ள்ஸ்

# கல்கி

09.08.2009



களே மீதிக் கதையைச் சொல்லுங்கன்னு பிசின் மாதிரி ஒட்டிப்பாங்க'ன்னு கோலிவுட் முழுக்கப் பேச்சு. ஒருமுறை கைகுலுக்கினா போதும்னு தவமிருக்காங்க ஆளுங்க!

**(அசின்! பாத்தும்மா... கையில ஃபெவிக்காலைத் தடவிக்கிட்டு வரப் போறாங்க!)**

'நாடோடிகள்' சசிகுமார், விக்ரம் கம்

# சினி

அடிக்காத குறையாக வெளியே துரத்து கிறாராம் அம்மணி மீனா. பின்ன என்ன வாம்... கல்யாணம் ஆனவுடனே அம்மா வேஷத்துக்கு நடிக்கக் கூப்பிட்டா கோபம் வராதா என்ன?

**(குழந்தை பொறக்கற வரை குறைஞ்சபட்சம் அண்ணி வேஷமாவது கொடுங்கப்பா...)**

உலக அழகிப் போட்டியில் இந்தியா சார்பில் போட்டியிட்டு இரண்டாம் இடத்தைப் பிடித்த 'கேரளா' பார்வதி ஓமனகுட்டன் இந்தி யிலும், தமிழிலும் நடிக்க வரு கிறாராம்!

**(அப்போ இனிமேல் பாலிவுட், கோலிவுட்ல சேச்சிங்க ஆட்சிதானா?)**

'ஒருமுறை பேசிட் டாலே போதும். நேத்து பாதியிலே விட்டுட்டீங்

## நியூஸ் பாய்

பெனிக்குப் படம் இயக்கப் போறாராம். நாடோடிகள் ஹீரோயினைத்தான் போடணும்னு அடம்பிடிக்கிறாராம்.



# சிப்ஸ்

(ஷ்... அதெல்லாம் ஒண்ணுமில்ல. நல்லதா யோசிங்களேன்டா...)

**மி**ஷ்கின் யூனிட்டே தீபாவளி குஷியா இருக்கு. உலக நாயகனை வைச்சு படம் பண்றதால ஒளிவட்டத்தோட உலாவர்றாங்களாம்.

(யுனிவர்சல் ஞானஸ்நானத்தை கமல் எல்லா யூனிட்டுக்கும் வழங்குவாராக! ஆமென்...)

**உ**ங்களுக்கு நடிக்க ஆசையா? 'என்றும் அன்புடன்' இயக்குநர் பாக்கியநாதன் வலைவீசித் தேடுறாராம்.

(போய் மாட்டிக்குங்கோ...)

**ர**விதேஜா, தமிழ் நாடோடியை சுந்தரத் தெலுங்குக்குக் கடத்திட்டுப் போறாராம். தெலுங்குக்குப் போனாலும் சமுத்திரகனிதான் இயக்கணும்னு சொல்ல, கனிக்கு ஒரே இனிப்பு!

(பிரியுறது காதலர்களோட உரிமை. காதலர்களைச் சேர்த்து வெச்சவங்களே அவங்கள ஒதைக்கிறது ஒண்ணாம் நம்பர் அராஜகம்னு கோலிவுட்ல காய்கணக்கா ஒரே புளிப்பு!)




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்:
லக்ஷ்மி நடராஜன்

ஆசிரியர் : சீதா ரவி

உதவி ஆசிரியர்கள் :
கதிர்பாரதி, அமிர்தம் சூர்யா

வடிவமைப்பு :
எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், பா.கோபால்

தொலைபேசி : 044 - 4343 8888
தொலைநகல் : 044 - 4343 8899

ஆசிரியர் குழு :
044 - 4343 8822
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
044 - 4343 8811
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
044 - 4343 8833
subscription@kalkiweekly.com

விற்பனை பிரிவு :
044 - 4343 8844
sales@kalkiweekly.com

இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

இணையதளத்தில்...
வாங்கி, வாசித்து, மகிழ...
www.sangapalagal.com

சந்தா விவரம் (ஒரு வருடம்) :
உள்நாடு : ரூ.500/-
வெளிநாடு : ரூ.3,800/-

கல்கி பில்டிங்க்ஸ்,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காட்டுதாங்கல், சென்னை - 32



# கடித சுகம்

## - சேரன் தரும் பொக்கிஷம்

''என்றென்றும் நெஞ்சை விட்டு நீங்காமல் பொக்கிஷமாகப் புதைந்து கிடக்கும் நினைவுகளை மீட்டெடுத்துப் பகிர்ந்து கொள்வதில் தனி சுகம் உண்டு. வாழ்வில் நாம் சந்திக்கிற அத்தனை விஷயங்களிலும் மிகுந்த வல்லமை பெற்றது காதல்தான். நாகரிகத்தின் வளர்ச்சியால் நலிந்து காணாமல் போய்க் கொண்டிருக்கும் காதலைத்தான் நான் சொல்லி இருக்கிறேன். இன்றைய கம்ப்யூட்டர் உலகில் எதையும் அனுபவித்து உணர்வது அருகிப் போய்விட்டது. அதற்கு காதல் மட்டும் விதிவிலக்காக இருக்க முடியுமா என்ன? இழந்துவிட்ட காதலை மீட்டு எடுப்பதுதான் பொக்கிஷம்'' என்கிறார் விரைவில் நமக்கெல்லாம் பொக்கிஷத்தைத் தரப்போகும் சேரன்.

### நோ உணர்ச்சி! எல்லாமே தகவல் தான்!

''தகவல் தொழில்நுட்பம் அசுர வளர்ச்சி கண்டிருப்பதால், நாம் வாழ்க்கையை உணர்வுபூர்வமாகப் பார்த்து, அனுபவிப்பதை மறந்து விட்டோம். அதிலும் இந்த செல்ஃபோன் வந்த பிறகு, கடிதம் எழுதுகிற பழக்கம் முற்றிலுமாகப் போய்விட்டது. ஊரில் அப்பாவுக்கு வயசாகி, பல்போய்விட்ட தகவலைத் தெரிந்து கொண்டு, நகரத்து அவசர கதியில் அதை மறந்துவிட்டு, ஊருக்குப் போய் அப்பாவைப் பார்க்கிறபோது, அந்தப் பொக்கை வாயை ரசிக்க மறந்துவிடுகிறோம். அந்த மறந்துவிட்ட கடிதம் மூலமான தகவல் பரிமாற்றத்துக்கு, அதன் சுகத்துக்குப் புத்துயிர் ஊட்டுவதுதான் பொக்கிஷம். கிராமத்தில் தபால்காரரை எதிர்பார்த்துக் காத்திருக்கும் தவிப்பு காதலைப் போலவே சுவாரஸ்யமானது. ஆனால், அந்தச் சுகத்தை செல்ஃபோன் அசுரன் விழுங்கி ஏப்பம் விட்டு விட்டானே!''

### நாகூர் - கல்கத்தா காதல்

''கதாநாயகி தமிழ்நாட்டில் நாகூரில் வசிக்கும் ஒரு முஸ்லிம் பெண். நாயகன் கல்கத்தாவில் வேலை பார்க்கும் ஒரு என்ஜினியர். அவர்கள் காதலுக்கு 'தொலைவு' அத்தியாவசியமாக இருந்தது. அவசரம் என்றால் இப்போது போல செல்ஃபோனில் உடனே பேசிவிட முடியாது. டெலிபோனில் டிரங்க் கால் புக் பண்ணிவிட்டுக் காத்திருக்க வேண்டும். அவர்களுக்கு இடையிலான 1200 மைல் தொலைவு காரணமாக அவர்களின் காதல் கடிதப் போக்குவரத்தால் மட்டுமே வளர வேண்டிய கட்டாயம். அந்தக் காதலுக்காகக் காத்திருப்பதும், காத்திருந்து காதலிப்பதும்தான் கதைக்கே அழகு கூட்டுகின்றன.''

### ரீவைண்ட் சவால்?

''கதை 1970களில் நடக்கிறது. படத்தின் எண்பது சதவிகிதக் காட்சிகள் அந்தக்

காலகட்டத்தில் அமைந்தவைதான். இப்போது கொல்கத்தாவில் ஏராளமான மாற்றங்கள் ஏற்பட்டுவிட்டதால், அந்தக் கால கட்டத்தை மீண்டும் உருவாக்குவது பெரிய சவாலாக இருந்தது. கல்கத்தா முழுக்க தேடிப் பார்த்தும், பழைய கால வீதிகள் பத்துக்கு மேல் கிடைக்கவில்லை. அவற்றில் கூட நவீன காலத்தின் சாயல் படிந்திருந்தது. எழுபதுகளில் இருந்த



தீப்பெட்டியில் தொடங்கி, அந்தக் கால தபால் ஆஃபீஸ், தந்தி அலுவலகம், தெருக்கள், டிராம், ரயில், பஸ்கள் என்று எல்லாவற்றையும், அதோடு பழைய சென்னையை, கல்கத்தாவை மீண்டும் உருவாக்க ரொம்பவும் மெனக்கெட வேண்டி இருந்தது. அப்போது நாகூரில் தெருக்கள் எப்படி இருந்தனவோ, அப்படியே உருவாக்கி, படம் பிடித்ததன் மூலமாக கால எந்திரத்தை ஜெயித்திருப்பதாகச் சந்தோஷப்படுகிறோம்.''

**இந்து-முஸ்லீம் கா(மோ)தலா?**

''நதிரா என்ற நாகூர் இஸ்லாமியப் பெண்ணாக பத்மப்ரியா நடித்திருக்கிறார். இஸ்லாமிய கலாசாரத்தை அழகாகவும், தெளிவாகவும், அழுத்தமாகவும் பதிவு செய்திருக்கிறோம். அதே சமயம் அவர்களின் பண்பாடுகள் எங்கேயும் சீர்குலையாமல் கவனமாகக் கையாண்டிருக்கிறோம். அவர் சம்பந்தப்பட்ட எல்லா காட்சிகளையும் நாகூரில் ஒரு முஸ்லிம் வீட்டில்தான் எடுத்தோம்.

இந்தப் படத்தில் சொல்லப்பட்டிருப்பது கடிதம் வாயிலான ஆழமான காதல் மட்டுமே. அனாவசியமாக மதங்களை இழுத்து, சர்ச்சை ஏற்படுத்தி, அதன் மூலமாக வியாபாரம் செய்வது எனக்குப் பழக்கமில்லாத விஷயம்.''



**"ஒவ்வொரு காட்சிக்கும் பின்னால் எங்களுடைய கடினமான உழைப்பு பொதிந்து கிடக்கிறது"**

**இன்னொரு ஆட்டோகிராஃப்?**

''கதை 2009ல் என் மகனின் ஃப்ளாஷ் பேக்கில் தொடங்கி பின்னோக்கி நகர்கிறது. எனவே, என் மகன் கேரக்டரில் நடிக்க என் முகச் சாயல்கொண்ட ஒரு இளைஞர் தேவைப்பட்டார். ஆனால், தேடிக் கண்டுபிடிப்பது மிகவும் சிரமமாக இருந்தது. டி.வி.யில் ஒரு பாடல் காட்சியை யதேச்சையாகப் பார்த்தபோது, கிடைத்தவர் ஆர்யன் ராஜேஷ். ஏற்கெனவே அவர் ஹீரோவாக நடித்தவர் என்றாலும், இந்தப் படத்தில் என் மகன் ரோலில் நடிக்க தயங்காமல் ஒப்புக் கொண்டார்.''

**சபேஷ் - முரளி**

''பொதுவாகவே முன்னணியில் இருக்கவேண்டிய சில திறமைசாலிகள் இந்தச் சமூகத்தில் பின்னாலேயே தங்கி விடும்படியான அவலம் நேரிட்டுவிடுகிறது. அப்படிப் பட்டவர்கள்தான் சபேஷ் - முரளி. வெற்றிகரமாக ஓடி, பத்திரிகைகளாலும், மற்றவர்களாலும் பெரிதும் பாராட்டப் பட்ட என்னுடைய 'பாரதி கண்ணம்மா' முதல் 'தவமாய் தவமிருந்து' வரை அனைத்துப் படங்களுக்கும் பின்னணி இசையால் உயிரூட்டியவர்கள். இது அவர்களுக்கு 25வது படம். கேரளாவில் ஆலப்புழாவில் போட் ஹவுஸில் அவர்களை உட்கார வைத்து, பாடல்களுக்கு டியூன் வாங்கியதும், கவிஞர் யுகபாரதியை கூடவே உட்கார வைத்து, டியூனுக்கு சுடச்சுட வரிகளை எழுதி வாங்கியதும்கூட புதுமையான அனுபவம்தான்'' என்று அனுபவ வலிகளைப் புன்னகையுடன் சொல்லி முடித்தார் சேரன்.

**- எஸ்.சந்திரமௌலி**

திருமாவளவனுக்கு நாடாளுமன்ற உறுப்பினர் பதவி புதிய ஏற்றம். தம் தொகுதியின் முன்னேற்றம் முதல் பல்வேறு விஷயங்களைப் பகிர்ந்துகொண்டார்.

**சிதம்பரம் தொகுதி வெற்றி?**

''எங்கள் இயக்கப் பாதையில் ஒரு மைல் கல். ஆனால் இதுவே இலக்கல்ல. இந்த வெற்றிக்குக் காரணம் சாமான்ய மக்கள்தான் என்று நன்றியுடன் நினைக்கும் அதே நேரம், இந்த வெற்றி மகிழ்ச்சி யளிக்கக்கூடியதாகவோ அல்லது பெருமையளிக்கக் கூடியதாகவோ இல்லை என்பதைச் சொல்ல வேண்டும். காரணம் ஈழத் தமிழர்களுக்கு நேரிட்ட பேரழிவும், விழுப்புரத்தில் நாங்கள் அடைந்த தோல்வியும்.''

**தொகுதியில் முன்னுரிமை**

''சிதம்பரம் தொகுதி ஒரு வடிகால் பகுதி. மழை, வெள்ளத்தால் அடிக்கடி பாதிக்கப்படுகின்ற பகுதி. வெள்ளப் பாதிப்பிலிருந்து அந்தப் பகுதியைக் காப்பாற்ற வேண்டும். கொள்ளிடம் கரையைப் பலப்படுத்தி வீராணம் ஏரி உபரி நீரை, கொள்ளிடத்தில் விடுவதற்கான கட்டமைப்பை உருவாக்க வேண்டும்.''

**நாடாளுமன்றம்?**

''இந்தி ஆதிக்கம் மேலோங்கிய அவையாகத்தான் இருக்கிறது அது. பெரிய தலைவர்கள் மற்றும் கட்சிகளுக்குக் கொடுக்கும் முக்கியத்துவத்தை, சிறிய கட்சிகளுக்கும் அதன் தலைவர்களுக்கும் கொடுப்பதில்லை. எனக்கு மூன்று நிமிடம் கொடுத்தால் நான் என்ன பேச முடியும்? இருந்தும் இந்த இரண்டு மாதத்தில் ஐந்து முறை பேசிவிட்டேன். அதில் மூன்று முறை தமிழில் பேசியிருக்கிறேன். நான் தமிழில் பேசுவதைப் பார்த்து, மற்ற தமிழ்நாட்டு உறுப்பினர்கள் தமிழில் பேச ஆர்வமாக இருக்கிறார்கள். ஒருமுறை நான் பேசி முடித்தவுடன் ஃபரூக் அப்துல்லா எழுந்து, ''யு ஆர் எ குட் ஸ்பீக்கர்'' என்று கூறியது



# ''தனித்தே இயங்குகிறேன்...''

மிகவும் பெருமையாக இருந்தது.

தி.மு.க. கூட்டணியில் இருந்தாலும் நட்சத்திரச் சின்னத்தில் நின்று வென்றேன். தனித்தேதான் இயங்குகிறேன். என்றாலும் தி.மு.க.வுடன் இணக்கமாக இருக்கிறேன்.''

**இனி ஈழம்?**

''மீண்டும் வெடித்து எழும் விடுதலைப் போர். ஈழத் தமிழர்களின் நிலத்தை சிங்களர்கள் அபகரித்துக் கொண்டாலும், அவர்கள் களத்தை இழந்து விடவில்லை. பொதுமக்களைக் கொன்றதால் போர் முடிந்ததாக ஆகாது. ஒரு விடுதலை இயக்கத்தை முற்றிலும் நசுக்கிவிட முடியாது.''

''எம்.ஜி.ஆர். மறைவுக்குப் பிறகு கலைஞரை எதிர்த்து இருபத்திரண்டு வருடங்களாக அரசியல் செய்யும் ஜெயலலிதா, அவரது அரசியல் சாணக்கியத்தில் துளிக் கூட கற்றுக் கொள்ளவில்லை என்று தெரிந்தது. ஜெ. எடுத்த இந்த முடிவால் தி.மு.க.வுக்கு நஷ்டம் ஏதுமில்லை. அரசியலில் அடிப்படை நியாயம், நேர்மை இருக்க வேண்டும் என்பது பொதுவான எதிர்பார்ப்பு. யதார்த்த நிலை அப்படி இல்லையென்றாலும் ஒரு எதிர்க்கட்சி அதை எதிர்கொண்டுதான் ஆகவேண்டும். விலகி நின்றால் அது ஆற்றாமையின் வெளிப்பாடு. கிராமத்தில் சொல்வது போல் 'ஏரி மேல் கோபித்துக் கொண்டு' போன கதையாக இருக்கிறது.''





**''கருணாநிதியின் அரசியல் சாணக்கியத்தில் துளிக்கூட ஜெயலலிதா கற்றுக் கொள்ளவில்லை''**

**சிங்களர்களைக் கோபப்படுத்தக் கூடாது என்கிறாரே கலைஞர்!**

''சிங்களர்களின் கைமேலோங்கிவிட்டதால் இப்படியெல்லாம் பேச வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டிருக்கிறார். இனி கோபப்படுவதற்கு என்ன இருக்கிறது? ஈவிரக்கம் உள்ளவரைக் கோபப்படுத்த வேண்டாம் என்றால் அது சரியாக இருக்கும். மனிதநேயமே இல்லாத கும்பலைக் கோபப்படுத்த ஒன்றுமில்லை. ஈழ விவகாரத்தில் இந்திய அரசு பெரிய அக்கறை காட்டவில்லை. காங்கிரஸ் இழைத்த துரோகத்துக்கு மன்னிப்பே கிடையாது.''

**ஜெயலலிதாவின் இடைத்தேர்தல் புறக்கணிப்பு?**

**தே.மு.தி.க. போட்டியிடுவது குறித்து**

''இனி தி.மு.க. வெற்றி உறுதியாகி விட்டது.''

**பா.ம.க., ம.தி.மு.க.?**

''நம்பி வந்தவர்களை நட்டாற்றில் விட்டார் ஜெ. இடைத்தேர்தல் குறித்த திணித்து விடப்பட்ட அவரது முடிவை எதிர்க்க முடியாமல் முடங்கி விட்டார்கள் மருத்துவரும், வைகோவும். முட்டுச்சந்தை முட்டி நிற்கிறார்கள். ஆனால் தோழர்கள் வலது பக்கமாகவும் இடது பக்கமாகவும் பிரிந்து போய்விட்டார்கள். அ.தி.மு.க. கூட்டணி இனி நெல்லிக்காய் மூட்டை.''

**- ப்ரியன்**



"என் மனைவி பாடும்போது நான் வீட்டை விட்டு வெளியே வந்திடுவேன்."

"ஏன்...?"

"இல்லைன்னா, உணர்ச்சிவசப்பட்டு அவளை 'கழுதை'ன்னு திட்டிடுறேன்..."

- பிரியதர்ஷன்

# மகாராணி... மனைவி!



"எதிரி நாட்டு மகாராணி பெரிய டார்ச்சராய் இருப்பாள் என்று நினைக்கிறேன் அமைச்சரே..."

"எப்படிச் சொல்றீங்க மன்னா?"

"பின்னே எதிரி மன்னன் அரண்மனையில் தங்காமல், இப்படி அடிக்கடி போர், போர் என்று படையெடுத்து வந்து நம் உயிரை வாங்குகிறானே..."

---

## அஞ்சலி

# இதயத்தில் நிறைந்தவர்!

படித்தது ஐந்தாம் வகுப்புதான். ஆனால் தமது 96வது வயதில் கங்குபாய் ஹங்கல் மாரடைப்பினால் இறந்தபோது அவருக்கு நான்கு கௌரவ டாக்டர் பட்டங்கள்; கர்நாடக பல்கலைக்கழகத்தின் செனட் உறுப்பினர் என்ற அந்தஸ்து வேறு. ஐம்பதுக்கும் அதிகமான விருதுகள் - பத்ம பூஷன் உட்பட!

இந்துஸ்தானி இசையில் கொடிகட்டிப் பறந்த கங்குபாயைப் பற்றிக் குறிப்பிடும் போது அவரது அம்மா அம்பாபாய் பற்றியும் குறிப்பிட்டே ஆகவேண்டும். அவரும் ஒரு பிரபல கர்நாடக இசைப் பாடகிதான். இந்துஸ்தானி இசையைக் கற்றுக்கொள்ள தமது மகள் தினமும் தார்வாடிலிருந்து ஹுப்ளிக்குச் செல்ல வேண்டியிருந்தது என்பதற்காக, தமது வீட்டை ஹுப்ளிக்கு மாற்றிக் கொண்டார்.

அதுமட்டுமல்ல, பாடுவதையே நிறுத்திக் கொண்டார்; இந்துஸ்தானி இசையைக் கற்றுக் கொண்டிருந்த கங்குபாய் தாம் பாடும் கர்நாடக இசையால் குழப்பமடைந்துவிடக் கூடாது என்பதால்! (பின்னாளில் தம் அம்மா இப்படிச் செய்திருக்கக் கூடாது என்று கங்குபாய் வருந்தியதுண்டு).

கிருஷ்ணாச்சார்யா, சவாய் கந்தர்வா போன்ற மேதைகளிடம் இசை பயின்றார் கங்குபாய். தொடக்கத்தில் கங்குபாய் மேடையேறியது ஒரு கதக் நடனக் கலைஞராக! பிறகுதான் இந்துஸ்தானி இசை அவரை ஆட்கொண்டது.

தாழ்த்தப்பட்ட சமூகத்தில் பிறந்த கங்குபாய் மணந்தது ஒரு பிராமண வழக்கறிஞரை. இரண்டு மகன்கள், ஒரு மகள். சில வருடங்களுக்கு முன் தம்மைத் தாக்கிய எலும்புப் புற்று நோயை வெற்றிகரமாக முறியடித்தார் கங்குபாய். ஆனால் இவரது மகள் கிருஷ்ணா புற்று நோயினால் இறந்தார்! கங்குபாயின் விருப்பப்படி அவரது கண்கள் தானம் செய்யப்பட்டன.

தமிழகத்தைச் சேர்ந்த பிரபல இசை மேதை டி.கே.பட்டம்மாள் இறந்த சில நாட்களிலேயே மறைந்த கங்குபாய்க்கு, கர்நாடக அரசு செய்துள்ள சில மரியாதைகளைக் குறிப்பிட்டாக வேண்டும்.

கங்குபாய் தார்வாடில் வாடகைக்குக்





குடியிருந்த வீடு ஒரு கொங்கணி குடும்பத்துக்குச் சொந்தமாக இருந்தது. அதை வாங்கி ஓர் அருங்காட்சியகம் மற்றும் இசைப் பள்ளியாக மாற்றியமைத்திருக்கிறது அரசு. அதுவும் கங்குபாய் உயிருடனிருந்தபோதே! சுமார் இருபத்தைந்து லட்சம் செலவில் அந்த வீட்டின் தொன்மையான தோற்றம் மாறிவிடாமல் செப்பனிடப் பட்டுள்ளது.

அந்த வீட்டின் இரு அறைகளிலும் கங்குபாயின் பல்வேறு புகைப்படங்களைக் காணலாம். தவிர, இந்துஸ்தானி இசை தொடர்பான பல்வேறு குறிப்புகளும் உள்ளன.

கங்குபாய் இறந்ததற்கு இரண்டு நாட்கள் விடுமுறை அறிவித்த கர்நாடக அரசு, அவரது இறுதி ஊர்வலத்துக்குப் பொறுப்பேற்றது.

கங்குபாய் தமது கடைசிக் கச்சேரியை 75வது வயதில் செய்தார். ஆனாலும் தனித்தன்மை நிறைந்த, கனமான, கம்பீரம் பொருந்திய அவரது குரலால் இன்னும் இசை ரசிகர்களின் மனத்தில் நிறைந்து இருக்கிறார்.

**- ஜி.எஸ்.எஸ்.**



# திரும்பும் வரலாறு!

'ஒட்டக்கூத்தரின் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள்.' நாம் கேள்விப்பட்டு எல்லா ஊர்களிலும் பேசப்படுகின்ற உவமை மொழியை, அதன் உண்மையான அர்த்தத்தோடு சென்னை ராஜா அண்ணாமலை மன்றத்தில் ஒட்டக்கூத்தரின் வரலாற்றை நாடகமாக நடத்திக் காட்டினர்.

வேறு யாருமல்ல. ஆர்.எஸ். மனோகரின் நாடகக் குழுவினர்தான். ஆர்.எஸ். மனோகர் என்றாலே நம் நினைவுக்கு வருவது பிரமாண்டமான செட்டும், வரலாற்று காலகட்டத்துக்கே நம்மை அழைத்துச் செல்லும் உடைகளும் மற்றும் அழகான பைந்தமிழ் உச்சரிப்பும்தான்.

அவர் நம்மோடு இல்லை என்றாலும், அவரின் கலைப் பணியை அவரின் சீடர் நந்திவர்மன் ஜீவன், அவருக்குச் சற்றும் குறையாமல் நிகழ்த்திக் கொண்டிருக்கிறார்.

வழக்கறிஞராக அவர் சம்பாதிக்கும் பணத்தைக் கொண்டும், அங்கங்கே கிடைக்கும் சிறிய நன்கொடைகளைக் கொண்டும் நாடகம் நடத்துகிறார்.

இவர்கள் முழு நேர நாடகக் குழுவினர் அல்ல. நாடகம் போடப்படுவதற்கு இரண்டு அல்லது மூன்று மாதங்களுக்கு முன்னர் மாலை வேளைகளில் சந்தித்து ஒத்திகை பார்த்து ஒழுங்குபடுத்துகின்றனர்.

நந்திவர்மன் ஜீவன் இயக்கி நடித்த ஒட்டக்கூத்தர் நாடகம், அவரின் தலைமையில் இயங்கிக் கொண்டிருக்கும் நாடகக் குழுவின், இந்தக் காலகட்டத்தில் நான் பார்க்கும் இரண்டாவது நாடகம்.

நான் பார்த்த ஒட்டக்கூத்தர் நாடகத்துக்கும் அதற்கு முன்னால் பார்த்த தென்பாண்டிச் சிங்கம் நாடகத்துக்கும் நிறைய வித்தியாசங்களை உணர முடிந்தது.

ஒட்டக்கூத்தர் நாடகத்தில் ஒருசில நடிகர்களைத் தவிர்த்து அனைவரும் பாத்திரத்தை உணர்ந்து நடித்திருந்தனர். அதுவும் பைந்தமிழை உச்சரிக்கும்போது

அது வேற்றுக்கிரகவாசிகளின் மொழி போல் தனித்து இல்லாமல் நடிகர்களின் உடலோடு நன்கு பொருந்தி இயல்பாக வெளிப்பட்டதைப் பாராட்டியே ஆக வேண்டும்.

சினிமா நடிகர்கள் நாடகத்துக்குத் திரும்ப வருவதும், அதில் தங்கள் திறமையை அதிகப்படுத்திக் கொள்ள ஆவல் இருப்பதும் பாராட்டுக்குரியது. நம்பிகாளி புலவரின் வேலையாளாக வரும் நடிகர் நடிப்பையும், மிகச் சரியான நேரத்தில் நகைச்சுவைப் பகுதியையும் திறம்படச் செய்கிறார். இவர் உருவத்திலும் செய்கையிலும் என்.எஸ்.கிருஷ்ணனை நினைவு படுத்துகிறார்.

செட் மாற்றங்கள் மிக மிக அதிகப்படியான வேகத்தில் நடப்பது ஆச்சர்யப்பட வைக்கிறது. அதே போல நாடகம் நிகழ்ந்து கொண்டிருக்கையிலேயே வசனத்தை சக நடிகருக்குச் சரிசெய்வது தெளிவாகத் தெரிகிறது. இன்னும் அதிகப்படியான ஒத்திகையும், சில நடிகர்களுக்கு நடிப்பு சார்ந்த பயிற்சியும் அவசியம்.

இசையும் ஒளி அமைப்பும் சிறப்பாக இருந்தது. நாடகத்தின் இடைவேளையில் நடக்கும் பாராட்டு நிகழ்ச்சிகளை முதலிலேயே முடித்துவிட்டால் நாடகத்தின் உணர்வை ரசிகர்கள் தக்கவைத்துக் கொள்ள ஏதுவாய் இருக்கும்.

எது எப்படி இருப்பினும் இதைப் போன்ற வரலாற்று நாடகங்கள் நடத்த நம்மிடம் ஒரு குழு இருப்பதை நினைத்து நாம் சந்தோஷப்பட வேண்டும். மேலும் இந்த நாடகங்களை, கல்லூரிகள் மற்றும் பள்ளிகளுக்குக் கொண்டு செல்ல முயற்சி செய்யவேண்டும்.

**- கூத்துப்பட்டறை விஜயன்**



# கல்கி



2009 ஆகஸ்ட் 9
விரோதி ஆடி 24
மலர் : 68
இதழ் : 2

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்

## பிரதிபா பாடீலிடம் புகார் மனு!

பிரதான எதிர்க்கட்சியான பா.ஜ.க., குடியரசுத் தலைவரிடம் கொடுத்திருக்கும் மனுவில், அரசின் மீது ஏராளமான குற்றச்சாட்டுகள்! அவை நியாயமானவையாகத் தோன்றினாலும், இவ்வாறு மனு கொடுப்பதால் என்ன நற்பயன் விளையும் என்பது கேள்விக்குறிதான்.

இந்தோ-பாகிஸ்தான் கூட்டறிக்கை வாசகங்களைச் சரியாக வடிவமைக்கவில்லை; அயலுறவுக் கொள்கையில் இரு முக்கிய மாற்றங்களை பிரதமர், யாரையும் கலந்தாலோசிக்காமல் செய்துள்ளார் என்பது பா.ஜ.க.வின் முக்கிய ஆட்சேபணை. 'பயங்கரவாதிகள் பேரில் பாக். கடுமையான நடவடிக்கை எடுக்காதவரையில் பேச்சுவார்த்தை தொடராது' என்கிற கொள்கை முடிவிலிருந்து பிரதமர் பின்வாங்கி விட்டதைச் சுட்டிக்காட்டியுள்ளது பா.ஜ.க. தலைமை.

இது தவிர, பாகிஸ்தானில் (பாலுசிஸ்தான்) தீவிரவாதச் செயல்களை இந்தியா ஊக்குவிக்கிறது என்ற பாகிஸ்தானின் குற்றச்சாட்டைக் குறித்துப் பேச்சுவார்த்தை நடத்த சம்மதமளித்துள்ளது இந்தக் கூட்டறிக்கை. இச்செயல் பாகிஸ்தானின் குற்றச்சாட்டை ஒப்புக்கொள்வதாகிவிடுகிறது என்று பா.ஜ.க. சுட்டிக்காட்டுகிறது. வேறு சில குற்றச்சாட்டுகளும் குடியரசுத் தலைவரிடம் தரப்பட்டுள்ள மனுவில் உள்ளன.

கட்சி மட்டத்திலும் அமைச்சரவை மட்டத்திலும் எடுக்கப்பட்ட முடிவுகளை மீறி பிரதமர் செயல்பட்டுள்ள நிலையில், அவரை ஆதரிக்கவும் இயலாமல், விட்டுக் கொடுக்கவும் இயலாமல் திணறு கிறது காங்கிரஸ் தலைமை! இவ்விதழ் அச்சேறும் நேரத்தில், காங்கிரஸ்




தலைவர் சோனியா காந்தி ஏதேனும் பூசி - மெழுகிய விளக்கத்தை அளிக்கக் கூடும். பிரதமரும் நாடாளுமன்றத்தில் விளக்கமளித்திருப்பார்.

எவ்வாறாயினும், இந்நிகழ்வு சில பாடங்களைப் புகட்டியுள்ளது. பிரதமரின் அதிகாரங்களைக் கேள்விக்குட்படுத்த முடியாதபோதிலும், கொள்கையளவிலான முடிவுகளில் மாற்றங்கள் செய்யும் முன், அவர் ஆளுங்கட்சியையும் அமைச்சரவையையும் கலந்தாலோசிக்க வேண்டும்; எதிர்க்கட்சியினரையும் அரவணைத்துச் செல்வதே நல்லது. இந்த மரபை மீறி அவர் செயல்படுகிறபோது, அவரது முடிவோ செயல்பாடோ சரியாக இருந்தாலும் அதற்கு தார்மிக பலம் இராது. இதற்கு மறுபக்கமாக, நாடாளுமன்றத்திலும் சரி, அதற்கு வெளியே நடைபெறக் கூடிய கொள்கை ஆய்வு அல்லது பரிசீலனைக் கூட்டங்களிலும் சரி, எதிர்க்கட்சியினர் உபயோகமாகப் பங்களிப்பது முக்கியமாகிறது. எதிர்க்கட்சியின் பணி எதிர்ப்பது மட்டும்தான் என்கிற கண்மூடித்தனமான எதிர்ப்பு உதவாது. இத்தகைய போக்கு, 'இவர்களைக் கேட்பதிலோ கலந்தாலோசிப்பதிலோ ஒரு பயனும் இல்லை!' என்கிற முன் தீர்மானத்தை, பிரதமர் உள்ளிட்ட ஆளுங்கட்சியினர் மனத்தில் விதைத்துவிடும்.

பாகிஸ்தான் தானே வளர்த்துவிட்ட பூதத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் திணறுகிறது. பயங்கரவாதத்துக்கு எதிரான எந்த நடவடிக்கைக்கும் எதிர்வினையாக அங்கே அடுக்கடுக்காக வன்முறைகள் நிகழ்கின்றன. ஆக, பாகிஸ்தான் பயங்கரவாதத்தை ஒடுக்கும்வரை பேச்சுவார்த்தை கிடையாது என்று சொல்வதால் யாருக்கு என்ன லாபம்? மாறாக, பயங்கரவாதத்தை ஒடுக்கவே இரு நாடுகளிடையே ஒத்துழைப்பு தேவை. அதற்குப் பேச்சுவார்த்தைகள் அவசியமாகின்றன. பாலுசிஸ்தானில் இந்தியாவின் தூண்டுதல் ஏதும் இல்லை என்பதை உறுதிபட எடுத்துச் சொல்லவும் பேச்சுவார்த்தைதான் உதவும்.

ஆலோசனைகளின் பயனாகத் திரளும் நல்முடிவுகளை ஏற்க பிரதமர் தயாராயிருக்க வேண்டும். அவற்றை வழங்க எதிர்க்கட்சியினரும் உழைக்க வேண்டும். இந்த முயற்சிகளால்தான் பிரச்னைகளை வெல்ல முடியுமே தவிர, வெறும் புகார் மனுக்களைச் சமர்ப்பிப்பதால் அல்ல!

# விமர்சனம்

**கதை...**

'உண்மையைச் சொல்லமாட்டேன்' என்கிற அப்பாவும், 'உண்மையைச் சொல்ல வைக்காமல் உன்னை விட மாட்டேன்' என மகனும் மோதிக் கொள்ளும் கதை. என்ன உண்மை? 'அப்பா' உண்மையிலேயே அப்பா அல்ல; மகன் உண்மையிலேயே மகனும் அல்ல.

**ப்ளஸ்:**

★ இயக்குநர் சரண் படம் என்பதால் ஏற்படும் எதிர்பார்ப்பு.

★ யூத்களுக்குப் பிடித்த ஹீரோ 'வினய்' என்பதால் அவர்கள் மத்தியில் இருக்கும் பரபரப்பு.

★ பாத்திரத்தோடு ஒன்றிவிட்ட அவரது நடிப்பு!

★ காஜல் அகர்வாலின் துறுதுறுப்பு!

★ கண்ணுக்குள் குளுமை சேர்க்கும் படப்பிடிப்பு.

★ நகைச்சுவையைக் கதையோடு கலந்து கொடுத்த கதையமைப்பு!

★ 'பாதி காதல் பாதி முத்தம்' என்ற வைரமுத்துவின் வரிகளில் உள்ள கதகதப்பு.

★ ஹரி-லெஸ்லியின் இளமை துள்ளும் இசையமைப்பு.

★ வி.டி.விஜயனின் படக்கோப்பில் இருக்கும் விறுவிறுப்பு.

★ எஸ்.ராமகிருஷ்ணனின் இயல்பான வசனத்தில் இருக்கும் தித்திப்பு!

**மைனஸ்:**

★ வினய்யின் கோளாறான வசன உச்சரிப்பு!

★ காட்டுக் கத்தலில் நம்மைக் கடுப்பேற்றும் கலாபவன் மணியின் கடுகடுப்பு!

★ நதிப்போக்காய் நகரும் கதையில் தேவையற்ற இடத்தில் பாடலின் ஊடுருப்பு!

★ கதை நிகழும் இடத்தில் கதையைத் தாண்டி, துருத்திக்கொண்டு தெரியும் செட்டின் மினுமினுப்பு,

★ முந்தைய சரண் படம் போல இல்லையே என்ற சலிப்பு.

மோதி விளையாடு -
செல்லுலாய்டு மத்தாப்பூ.

- மகிமைராஜன்

# மோதி விளையாடு



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்.
(வழி) தாம்பரம். சென்னை - 63. போன் : 22760612, 22762299,29710350
City Office No.7, முதல் மாடி. வேலு தெரு. மேற்கு மாம்பலம்.
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை - 600 033. போன் : 23714942

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 22 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய் தந்தையற்ற திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 150 மாணவர்கள் தங்கி படித்து வருகின்றனர். மேலும் கூடுவாஞ்சேரியில் உள்ள எங்களது குருகுலத்தில் 30 மாணவிகள் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன் நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர், ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | |
|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. 1,000/- |
| • மதிய உணவு | ரூ. 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. 2,00,000/- |

**நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு**

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில் /வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு Cheque / DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம். மேலும் எங்களிடமிருந்து ரசீதைப் பெற்றுக் கொள்வது அவசியம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்.

# வெளிச்ச



**தமிழ்மணவாளன்**

உடலென்னும் வீட்டுக்கு வெளிச்சச் சன்னல்;
உயர்காதல் வானத்தில் மினிரும் மின்னல்;
படகாகும் பார்வைக்குத் துடுப்பு; கோபப்
படுகுழியில் விழுந்தவர்க்கு அடுப்பு; மெல்ல
நடனமிடும் சிங்காரி, நளினம் காட்டும்
நங்கையவள் முகத்தினிலே; துக்கக் காற்றில்
குடமாகும் கவிழ்ந்தபடி; அந்த நேரம்
குடகாகும்; கண்ணீர் காவே ரியாகும்;

சிப்பிஇமைக் குள்ளிருக்கும் கறுப்பு முத்து;
சிறகுகளை விரித்தவுடன் நொடி நேரத்தில்
அப்படியே பார்வையினால் வான்வ ரைக்கும்
அற்புதமாய் பறந்துவரும் பறவை; வாயின்
செப்புமொழி தோற்றுவிடும் பொழுதில்கூட
செயல்திறனைக் காட்டுகின்ற மொழியின் வீச்சு!
அற்புதங்கள் நிகழ்த்துகிற அரங்கம்! நெஞ்சின்
ஆழத்தை வெளிக்கொணரும் விழியின் பேச்சு

# சன்னல்!



கருமேகக் கூந்தலென்றார்; எண்ணிப் பார்த்தேன்
கார்மேக மழைக்கஞ்சி கண்கள் காக்க
ஒருபிடியாய் மூக்கிருக்கும்; குடைகளாக
ஒய்யாரப் புருவங்கள் இரண்டு; கீழே
கருவிழிகள்; குடையிருந்தும் பயனும் என்ன?
கவலைமே கம்நெஞ்சில் தவழும்போது
கருக்கொண்டு கண்களுக்குள் மழையாய் மாறும்
காட்சிக்கே புருவமென்ப துண்மை யாகும்!

காணுகின்ற தொழிலுக்குக் கருவி; நெஞ்சக்
கலவரத்தில் படபடக்கும் குருவி; பெண்கள்
நாணுகின்ற செயலுக்கும் கருவி; இன்பம்
நடந்தாலும் மெல்லவரும் அருவி; கொஞ்சம்
கோணலென்றால் அழகுகெடும் பரவா யில்லை;
கோணலிதன் பார்வையிலே இருந்து விட்டால்
வீணாகும் பயணங்கள்; வாழ்க்கைப் பாதை
வேறுதிசை நோக்கிநமை இட்டுச் செல்லும்!

# ஸ்டைல் பாய்ஸ்!



"ஆண்களும் ஃபேஷன் கான்ஷியஸ்ஸா இருந்தா என்ன? அழுக்கா ஒரே ஜீன்ஸை மாட்டினா எப்படி? ட்ரெஸ் சென்ஸே இல்லை. பர்ஃப்யூமே போடத் தெரியல்ல... கொஞ்சம் அவங்களுக்கும் டிப்ஸ் கொடுங்களேன். நாங்களும் அவங்களை ரசிச்சு மார்க் போடறோம்" என்று பெண்கள் நம்மிடம் எஸ்.எம்.எஸ்ஸில் கொஞ்சினார்கள். ஸோ... கீழ்வரும் ஸ்டைல் டிப்ஸ்களை கடைப்பிடித்தால் பாட்ஷா ரஜினிகாந்த் போல் 'ஸ்டைலு... ஸ்டைலுதான்'னு பாடலாம்!

● சென்ட், பர்ஃப்யூம் உபயோகப்படுத்துங்கள். மிதமாக யூஸ் பண்ணவும். புஸ் புஸ்ஸென்று இரண்டே நாளில் மொத்த பாட்டிலையும் காலி செய்யாதீர்கள்.

● எல்லா இடத்துக்கும் ஹவாய் செப்பலை போட்டுக் கொண்டு போகாதீர்கள். ஹவாய் சப்பலுக்கு 'பாத்ரூம் ஸ்லிப்பர்ஸ்' என்று பெயருண்டு. 'க்ளாஸிக்', 'டிரெண்டி' என்று இரு வகையான காலணிகள் உண்டு. நல்ல ஷூ, ஸ்னீக்கர்ஸ் கண்டிப்பாக வாங்க வேண்டும்.

● தலைமுடிக்கு கண்டிப்பாக ஸ்டைல் தேவை. பளபளன்னு எண்ணெயைத் தடவி, தார் ரோடு போட்டாற்போல வகிடு எடுத்து, சப்பென்று வாரி, அடங்காப்பிடாரி தலைமுடியை அடக்குவதற்குப் பேர் ஹேர் ஸ்டைல் அல்ல. அராஜகம்! நல்ல தரமான

ஷாம்பூ, கண்டிஷனர் உபயோகப்படுத்தி தலைமுடியை க்ளீனாகவும் ஆரோக்கியமாகவும் வைச்சிருங்க. ஒரு நல்ல ஹேர்கட்டினால் உங்களுடைய பர்ஸனாலிட்டியே மாறும்.

● கலர் விதவிதமாக ட்ரை பண்ணவும். 'எனக்கு ப்ளூதான் பிடிக்கும்' என எப்பப் பார்த்தாலும் ப்ளூவில் வலம்வந்தீர்களானால் உங்களைப் பார்ப்பவர்களுக்கு போர் ஃபீலிங் தான் வரும். ப்ரௌன், க்ரே, பிங்க், ஆரஞ்சு எனப் போடவும். ''ஹய்யோ இது லேடீஸ் கலர்ஸ், நா போட மாட்டேன், சிரிப்பாங்க...'' என்றெல்லாம் கூச்சல் போடாமல் டிரெண்டியாக ட்ரெஸ் பண்ணவும்.

● நல்ல டிஸைனர் ஜீன்ஸ் கண்டிப்பாக உங்களிடம் அட்லீஸ்ட் ஒரு ஜோடியாவது இருக்க வேண்டும். மலிவு, ஆடித் தள்ளுபடி, (ஜீன்ஸ் கூட உண்டா) பிளாட்ஃபார்ம், ஒண்ணு வாங்கினா ரெண்டு ஃப்ரீ... இப்பேர்ப்பட்ட ஜீன்ஸ் பாண்ட் இருக்கலாம். ஆனால் நல்ல லுக், ஸ்டைல் வேண்டுமானால் அது டிஸைனர் ஜீன்ஸில்தான் கிடைக்கும்.

● ஆக்ஸஸரீஸ் என்று ஒரு வார்த்தை. அது பெண்கள் சமீபத்தில் தூக்கத்தில் கூட உச்சரிக்கும் வார்த்தை. இதற்காக அவர்கள் மெனக்கெடுவது உண்டே, ஸ்ரீஹரிகோட்டாவில் விஞ்ஞானிகள் உழைப்பதை விட அதிகம். கவனம் எடுத்துக் கொள்வதும் ஏராளம். க்ளாஸிக் ரிஸ்ட் வாட்ச், (''மொபைலிலேயே டைம் பார்க்கிறோம், வாட்சே கட்டறதில்லைன்னு சொன்னால் கஸாபுக்கு பக்கத்து ரூம் உங்களுக்குத்தான்...'' மிரட்டுகின்றனர் பெண்கள்.) நல்ல பர்ஸ், டிரெண்டி பேக், பெல்ட் இப்படி கவனமாகப் பார்த்துப் பார்த்து வாங்கவும்.

● முரட்டு மைனர் செயின், கைவழிய தாமரைக்கனி சைஸ் மோதிரங்கள், ப்ரேஸ்லெட்டுகள் தடிமனாக... இதெல்லாம் நோ! நோ!

● கை, கால் நகங்களைச் சீராக வெட்டி, க்ளீனாக இருக்கவும். க்ளீன் ஷேவ் பண்ணிய முகம் ஒரு நல்ல தோற்றத்தைக் கொடுக்கும்.

● உங்களுடைய வார்ட்ரோப் எப்படி என செக் பண்ணவும். என்ன ஸ்டைல் அதிகமாக யூஸ் பண்ணுகிறீர்கள், உங்களையறியாமலேயே எந்த கலர்களை அதிகமாக வாங்கி விடுகிறீர்கள் என்பதை ஆராயவும்.

● சரியான அளவில் கரெக்ட் ஃபிட்டிங் பாண்ட், ஷர்ட் மிக முக்கியம். ஓவர் சைஸாக அண்ணனுடையதை மாட்டி பந்தா பண்ணாதீர்கள்.

● டீ-ஷர்ட்ஸ் போடவும். ஜோக் என்ற பெயரில் ஆபாசமான வார்த்தைகள் கொண்ட டீ-ஷர்ட்ஸ் போடாதீர்கள். பெண்களை அவமானப்படுத்தும், காயப்படுத்தும் வார்த்தைகளைக் கொண்ட டீ-ஷர்ட்ஸ் வேண்டாமே!

● ஸ்டைலாக ட்ரஸ் மாட்டினால் மாத்திரம் போதாது; வசீகரமாகப் பேசவும் தெரிய வேண்டும்.

**- லதா சேகர்**



''ஒரு கப் திரிகடுகம் கொடுங்க''

நண்பர் ஒருவரைக் காணச் சென்ற இடத்தில் கேட்ட இந்த வித்தியாசமான பெயரால் நம் தலை தானாகத் திரும்பியது.

கேட்ட அந்த இளைஞர் காகிதக் கோப்பையில் வாங்கிப் பருகுகிறார். முகத்தில் ருசிப்பின் ரசிப்பு. ''வாக்கிங் போய்ட்டு வரேன். தினையரிசி கருப்பட்டி பணியாரம் பார்சல் பண்ணி வைங்க'' என்று சொல்லி விட்டு நகர, நாம் ஆவலுடன் அந்தக் கடைக்குள் எட்டிப் பார்த்தோம்.

''அதென்னங்க திரிகடுகம்?''

''சுக்கு-மிளகு-திப்பிலி, முடக்கத்தான் வேர் இதையெல்லாம் போட்டுச் செய்யற மூலிகை காப்பி'' என்று புன்னகையுடன் சொல்கிறார் கோபாலகிருஷ்ணன். கரும்பலகையில் இன்றைய ஸ்பெஷல் கேப்பை ரொட்டி, வரகு அரிசி கஞ்சி, காய்கறி ஊத்தப்பம் என வித்தியாசமான மெனு.



**"சுக்கு, மிளகு, திப்பிலி, முடக்கத்தான் வேர் இதையெல்லாம் போட்டுச் செய்யறது திரிகடுகம் மூலிகை காப்பி"**

**ம**துரை சமூகவியல் கல்லூரி வளாகத்தில் ரேஸ் கோர்ஸ் சாலையையொட்டி அமைந்துள்ளது குறுந்தானிய அறுசுவையகம். இதனை முழு ஈடுபாட்டுடன் நடத்தி வருபவர்கள் கோபாலகிருஷ்ணன் - ராணி தம்பதி.

''மதுரையில் 90க்கு முன்னாடி கம்மங்கூழ், கேப்பைக்கூழ் எங்குமே இல்லை. 1993ல் என் கணவர்தான் சைக்கிளில் வைத்து, கம்மங்கூழ் விற்கத் தொடங்கினார். இன்று மதுரை மாநகரில் மட்டும் முன்னூறுக்கும் மேல் தள்ளுவண்டிகளில் கம்மங்கூழ் மற்றும் கேப்பைக்கூழ் விற்கப் படுகிறது. அதனால நாங்க இந்த குறுந்தானிய மேட்டருக்கு மாறிட்டோம்'' என்கிறார் ராணி.

''குறுந்தானியம்னா என்னனு இப்ப இருக்கற நம்மில் பலருக்குத் தெரியாது. குறுந்தானிய உணவுப் பழக்கம் நம்மை விட்டுப் போய் பல காலமாச்சு. வரகு அரிசி, சாமை, தினை, குதிரைவாலி, கம்பு, கேப்பை, சோளம், கீரை விதைகள் இவை தாங்க குறுந்தானியம். இவை பழந்

தமிழர்களின் ஆதி உணவுப் பயிர்கள். இதைச் சாப்பிட்டவங்க நல்ல உடல்நலத்துடனும் பலத்துடனும் இருந்தாங்க. சாமை தோசை, சாமை உப்புமா, குதிரை வாலி வெண்பொங்கல், சோள ரொட்டி, வரகரிசி புட்டு, கேப்பை புட்டு, குறுந்தானிய அடை இவையும் எங்களோட ஸ்பெஷல்!'' என்கிறார் கோபாலகிருஷ்ணன்.



கோபாலகிருஷ்ணன்

குறுந்தானிய உணவுகளுக்கு சர்க்கரை நோய், இரத்தக் கொதிப்பு, இதய நோய் போன்றவற்றைத் தடுக்கும் ஆற்றல் உண்டாம். பொதுவாக சர்க்கரை நோயாளிகள் கோதுமையே சிறந்த உணவுன்னு நினைச்சுட்டு இருக்காங்க. அரிசியை விட கோதுமையில் வெறும் இரண்டு சதவிகிதம் சர்க்கரைதான் குறைவு. ஆனால், குறுந்தானிய உணவுகளில் சர்க்கரை சத்து ரொம்பக் குறைவு. அதோடு நார்ச்சத்து அதிகம். மலச்சிக்கல் ஏற்படாது.

''அதிகாலை ஐந்தரையிலிருந்து மாலை ஐந்தரை மணி வரை இந்த சுவையகம் இயங்குகிறது. ஒருநாளைக்கு சராசரி முன்னூறு வாடிக்கையாளர்கள் வர்றாங்க. முழுமையான குறுந்தானிய அறுசுவை உணவகம் தமிழகத்திலேயே இது ஒண்ணுதான்!'' என்கிற கோபாலகிருஷ்ணனின் குரலில் பெருமிதம்.

என்ன மேட்டரைப் படிச்சதுமே மதுரைக்கு ஒரு பஸ் பிடிக்கத் தோணுதுங்களா?

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**



# மதுரைக்கு ஒரு டிக்கெட்!

# சிலிர்க்க நேரம்...

டெஸ்ட் கிரிக்கெட் இனி ஒய்ந்துபோகும் என்று ஆசைப்பட்ட, சாபமிட்ட அனைத்து கனவான்களும் ஆஷஸ் தொடரைப் பார்த்து அடங்கிப் போயுள்ளனர். ரசிகர்கள் எதிர்பார்த்தது போலவே ஆஷஸ் தொடரில் ஆஸ்திரேலியாவும் இங்கிலாந்தும் கீரியும் பாம்புமாக



வாரங்களில் டெஸ்ட் கிரிக்கெட் பூட்ஸைக் கழற்றி வைக்கப் போகிற ஃபிளிண்டாஃப், இரண்டாவது டெஸ்ட்டில் ஒரு வெறியோடு ஸ்டம்புகளைக் குட்டிக்கரணம் அடிக்க வைத்த போது ரசிகர்கள் எழுச்சி அடைந்தார்கள். டெஸ்ட் கிரிக்கெட் தன் மகத்தான நேரங்களைக் காண்கிறது என்று விமர்சகர்கள் அற்புதமான ஆஷஸ் டெஸ்ட் தொடரைக் கொண்டாடுகிறார்கள்.

டெஸ்ட் கிரிக்கெட்டில் இது பயிர் இடும் காலம். அடுத்த பத்து ஆண்டுகளுக்கான வீரர்களைக் களத்தில் இறக்கிச் சோதனை செய்து வருகிறது ஆஸ்திரேலியா. இதே போல இந்தியா, இலங்கை, மேற்கு இந்தியத் தீவு, பாகிஸ்தான் என அத்தனை முக்கிய அணிகளும், சிங்கங்களோடு போரிட முயல்களைத்தான் அனுப்பிக் கொண்டிருக்கின்றன. அனுபவமே இல்லாத வீரர்களைக் கொண்டு பாகிஸ்தானைக் கதறடித்துவிட்டது இலங்கை. ஆனால் மேற்கு இந்தியத் தீவு வங்காளதேசத்திடம் தலைகுனிந்து விட்டது. ஆகவே, ஆஸ்திரேலியாவின் தோல்வியும் விழுப்புண்களும் முறைத்துக் கொண்டிருக்கிறார்கள். வாழிய டெஸ்ட் கிரிக்கெட்!

பொதுவாக இங்கிலாந்து, ஆஸ்திரேலியா தொடர்பான கிரிக்கெட் செய்திகளுக்கு சர்வதேச அரங்கில் அதிக முக்கியத்துவம் இருக்கும். அடுத்த சில

ச.ந.கண்ணன்

கொஞ்ச காலத்துக்குத்தான் என்று ஆறுதல் சொல்கிறது ஆஸ்திரேலியா மீடியா. என்ன இருந்தாலும் அவர்களுக்கு ஆஸ்திரேலிய கிரிக்கெட் அணி பொன்குஞ்சுதான்.

இங்கிலாந்தில் எந்தச் சந்தில் டெஸ்ட் மேட்ச் வைத்தாலும் உறுதியாக இருபதாயிரம் ரசிகர்கள் திரண்டு விடுகிறார்கள். ஆஸ்திரேலியாவில் டெஸ்ட் மேட்சை டி.வி.யில் பார்ப்பதை திருட்டு வி.சி.டி.யில் பார்ப்பது போல் உணர்கிறார்கள். இதனால் எண்பதாயிரம் இருக்கைகள் கொள்ளளவு கொண்ட மெல்போர்ன் மைதானம் எப்போதும் நிரம்பியே போகும்.



ஆனால் மொஹாலியில் சச்சின், லாராவின் டெஸ்ட் ரன்களைத் தாண்டிய தினத்தில் நான்கு பேர் எழுந்து கைதட்டினார்கள். இதுபோன்ற தவறான மைதானங்களில் டெஸ்ட் போட்டியை நடத்தவே கூடாது. ஐ.பி.எல். போன்ற பணமுதலை, டெஸ்ட் கிரிக்கெட்டை விழுங்க நினைத்தாலும், வீரர்கள் டெஸ்ட் கிரிக்கெட்டின் மகத்துவத்தை நன்றாகவே புரிந்துவைத்திருக்கிறார்கள்.

**ஆஸ்திரேலியாவின் தொடர் தோல்விகளால் நம்பர் ஒன் அணிக்கான போட்டி அதிகரித்து வருகிறது**

ஆஸ்திரேலியாவின் தொடர் தோல்விகளால் நம்பர் ஒன் அணிக்கான போட்டி அதிகரித்து வருகிறது. ஆஸ்திரேலியா, இந்தியா, தென் ஆப்பிரிக்காவிடையே பெரிய கண்ணாமூச்சி ஆட்டமே நடக்கிறது. அடுத்த வரிசையில் இலங்கையும் இங்கிலாந்தும் ஒருவரையொருவர் முண்டியடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

டெஸ்ட் கிரிக்கெட் அழியும் என்பதெல்லாம் சும்மா! 20-20யை விட விறுவிறுப்பாக இருக்கிறது ஆஷஸ். ஐந்து நாள் தம் கட்டி ஆடுபவர்கள் தன்னிகரற்ற கிரிக்கெட் கலைஞராகப் போற்றப்படுகிறார்கள். வரலாற்றில் பிராட்மேன், கவாஸ்கர் பெயர்கள் தான் பொறிக்கப்படுகின்றனவே ஒழிய, அஃப்ரிடியும் யூசுஃப் பதானும் அல்ல!

# தனிமை கண்டதுண்டு...



ழிப்பு வந்தபோது விடிந்திருந்தது. கூண்டுக் கிளியினைப் போல் சிணுங்கிக் கொண்டிருந்தது அலாரம். மெதுவாகத் தலையில் தட்டினாள் வினோதா. இன் றைக்கு விடுமுறைதான் என்றாலும் சலிப்பாய் இருந்தது. தனிமையில் இருக்க வேண்டுமே...

அறையின் இருளுக்குள் கதவிடுக்கு வழியாக வரும் வெளிச்சம் நிறைந்து கொண்டிருந்தது. வெளிச்சம் நிறை கையில் இந்த இருள் எங்கே போய்விடுகிறதென்று வினுவுக்கு ஆச்சர்யம் எழும். ஒளியும் இருளும் 'ஒளிந்து பிடித்து' விளையாடும் போலும். பின்பு இந்த இருள் வெளிச்சத்தின் உள்ளேயே ஒளிந்து கொள்கிறதோ?

வாசல் தெளிக்க கதவைத் திறக்கும் முன் கதவிடுக்கு அருகே கைவைத்துப் பார்த்தாள். காற்று மெல்ல மெல் லத் தவழ்ந்து வந்தது. நீர் நிறைந்து தளும்பும் குடத்தின் விளிம்புகளில் தண்ணீர் இப்படித்தான் வழியும். குஞ்சம் வைத்த சேலை, போர்வைகளை அலசிப் பிழிகையில் அந்தக் குஞ்சத்தின் வழியாக தண்ணீர் இப்படித்தான் ஒழுகி வழியும் மென்மையாக.

இப்படி எதைப் பார்த்தாலும் இதைப் போல் அது; அதைப் போல் இது என்று ரசித்துக் கொண்டு நிற்பது அப்பாவுக்குக் கோபமூட்டும்.

**தோ**ட்டத்திலிருந்து, 'குக்கூ குக்கூ குக்கூ' சத்தம் கேட்டது. புறவாசல் நடையில் போய் அமர்ந்திருந்தால் இந்நேரம் ரம்யமாக இருக்கும். வேண்டாம்; அப்பா வுக்குச் சாப்பாடு கொண்டு போக வேண்டுமே! சில நாட்களாக அதிக வேலை என்று, அலுவலக கெஸ்ட் ஹவுஸிலேயே தங்கிக் கொள்கிறார்.

காலை உணவு அப்பாவோடு போய்ச் சாப்பிட்டுக் கொள்ளலாம். திட்டமிட்டுக் கொண்டே தேநீர் தயாரித் தாயிற்று. அப்பா இருந்தால் இருவரும் நடைவாசலில் அமர்ந்து, எதிர் மொட்டை மாடியில் வெயில் காய்ந்து கொண்டிருக்கும் புறாக்களைப் பார்த்துக்கொண்டே அருந்தலாம்.

'சாப்பாடா இருந்தாலும் கூட ஒரு ஈஸ்தடிக் சென்ஸ் தேவையா இருக்கில்லப்பா... இந்த டீயை எங்கே உட் கார்ந்து எப்படி வேணா குடிக்கலாம். ஆனா இந்த கப்ல ஊத்தி இங்கே உட் கார்ந்து இப்படி வேடிக்கை பார்த்துட்டுக் குடிச்சா அந்த டேஸ்டே தனி.' - இப்படித் தான் எதையாவது பேசிக் கொண்டிருப்பாள்.

இப்படி எதையாவது ஒன் றைத் தொட்டு ஒன்றை நினைத்துக் கொண்டே போகையில் பயமாயிருக்கும்; என்றோ ஒருநாள் புத்தி பிசகிவிடப் போகிறதென்று.

**அ**க்காவிடம் ஒருநாள் சொன்னாள். ''அனுக்கா... எனக்கு எப்பவாச்சும் பைத்தி யம் பிடிச்சுட்டா... என்னை பாலகுருசாமி டாக்டர்கிட்ட தான் காட்டணும்...''

''ஆசா உனக்கு?'' கோபித்துக் கொண்டாள்.

''இப்போ இல்லை... இனிமேல் சொல்றேன்'' என்று சிரித்தாள் வினு.

''ஏன் அவர் மட்டும் என்ன ஸ்பெஷல்?'' பேச்சை மாற்றினாள் அனுஷ்யா.

''அவர் பேசும்போது எவ்



வளவு அன்பா, மென்மையா பேசுவார். தெரியுமா... வார்த்தைக்குக் கூட வலிக்கும்னு நினைப்பார் போல. அவர்கிட்ட ஆலோசனைக்கு வர்றவங்ககிட்ட பேசிப் பேசி பேச்சே அப்படி பக்குவமாயிடுச்சுன்னு சொல்வார். எனக்கு என்னவோ அவர்கிட்டே பேசற எல்லாரையும் மனநோயாளின்னே நினைச்சுக்குவார்னுதான் தோணுது...''

கூக்கூ... கூக்கூ... மறுபடியும் தோட்டத்திலிருந்து. சிந்தனை கலைந்தது. வேலைதான் முடிந்ததே... கொஞ்ச நேரம் தோட்டத்தைப் பார்த்து உட்காரலாம். இந்தக் காலை வெயிலுக்குத் தண்ணென்றிருக்கும் அந்த இடம். பன்னீர் மரங்களில் பூக்கள் ஒன்றிரண்டாய் உதிர்ந்து கொண்டிருக்கும். தென்னங்கீற்றுகளின் நுனியில் மழைத்துளி போல் வெயில் உருண்டோடும். ஒரு தென்னை மரத்திலிருந்து இறங்கி மற்றதை நோக்கி ஓடிய அணில் நின்று இவளைப் பார்த்து 'கீச்சு கீச்சு' என்று பேசியது.

'மனஅழுத்தமும் அல்சருக்கு ஒரு காரணம்தான். டிப்ரெஸ்ட்-ஆக இல்லாம மனசு விட்டுப் பேசணும். பேச ஆள் இல்லேன்னா என்ன? நல்ல மியூஸிக், புக்ஸ் எவ்வளவோ இருக்கே... பீ சியர் கேர்ள்... யு வில் ரெகவர் சூன்' என்று, அவள் அல்சருக்கு சிகிச்சை எடுத்துக் கொள்ளும் டாக்டர் சொன்னார் ஒருமுறை.

**❖ கார்த்திகா ❖**

அவர் சொன்ன நல்ல மியூஸிக்கையும், புத்தகங்களையும் விட இந்தக் கணத்தில் இந்த அணில்தான் உயர்ந்தது எனத் தோன்றியது. நல்ல இசைக்கும், புத்தகங்களுக்கும் தனிமையில் இருப்பவர், இல்லாதவர் என்ற பேதம் கிடையாதே... ச்சே... என்ன இது? காலையிலிருந்து பைத்தியம் போல் புலம்பிக் கொண்டு. கிளம்ப வேண்டியதுதான்.

மிகவும் விருப்பமான இளநீலமும், வெள்ளையும் கோடுகளாய் ஓடும் சுடிதார் அணிந்து கொண்டாள். 'பிடிச்ச மாதிரி ட்ரஸ் செஞ்சுக்கோ. பிடிச்ச மியூஸிக் கேளு. இல்லேன்னா கோ அண்ட் மீட் யுவர் ஃப்ரெண்ட்ஸ். டோண்ட் ஸே நோ ஒன் இஸ் நியர் டூ யு. டூ யு நோ வாட் ஜான்சன்

ஸெட்? ஒரு மனிதன் வாழ்க்கைப் பாதையில் முன்னேறிச் செல்லும்போது புதிய நண்பர்களை உருவாக்கிக் கொள்ள வேண்டும். இல்லேன்னா ரொம்ப சிக்கிரம் தனியாளா ஆகிடுவான். லேமா மேக் ஃப்ரெண்ட்ஸ் அண்ட் ஷேர் திங்ஸ் வித் தெம்' - இப்படியே அவர் சொன்னார், இவர் சொன்னார் என்று ஏதேனும் அறிவுரை கூறுவார். அந்த டாக்டரே ஒரு நண்பர்தான் என்று தோன்றும் வினுவுக்கு.

**ப**த்து நிமிடப் பேருந்துப் பயணம். நிறுத்தத்தில் இறங்கி சாலையைக் கடந்து இடப்புறம் திரும்பி இரண்டு நிமிடம் நடந்தால், இரண்டு நிமிடங்களுக்கு முன் பரபரப்பான சாலையில் நின்றோம் என்பதே மறந்து போய்விடும்.

இருபுறங்களிலும் சரக்கொன்றை மரங்களும், மே ஃப்ளவர் மரங்களும் வரிசையாய். சரளைக் கற்களில் உதிர்ந்து கிடக்கும் பூக்களைப் பார்க்கையில்




'ஆக்ஸிமோரான்'-க்குக் காட்சி உதாரணமாய்த் தோன்றும். சரக்கொன்றை மரங்களிலிருந்து காப்பிக் கொட்டை நிறக் காய்கள் உதிர்ந்து கிடக்கும். அதைக் காதருகே குலுக்கிப் பார்ப்பது வினுவுக்கு ஒரு விளையாட்டு.

இன்றும் அப்படியே ஒரு காயைக் கையிலெடுத்துக் குலுக்கியவாறு நடந்தாள். உள்ளே செல்லச் செல்ல ஒருபுறம் செம்பருத்தி, மல்லிகை, ரோஜாச் செடிகள். அப்பா, அலுவலகத்தில் வேலை எதுவும் இல்லையெனில் இந்தத் தோட்டத்தில் தான் இருப்பார். இன்னொரு பக்கம் நிற்கும் மரங்களில் அவளுக்குத் தெரிந்தது வேப்பமரத்தின் பெயர் மட்டும்தான்.

அதனாலென்ன? பெயரா முக்கியம்? அவளுக்கு அந்த மரங்களையெல்லாம் தெரியும். அந்த எல்லா மரங்களுக்கும் அவளைத் தெரியும். மரங்களை ஊடுருவி வெயில் தரையில் மாறி மாறி வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

'வெயில் கண்ணாமூச்சி ஆடும்
வேப்ப நிழல்' என்று கவிதை கூட எழுதியிருக்கிறாள் ஒருமுறை.

''**அ**ம்மை நான் இங்கே இருக்கேன்'' - அப்பாவின் குரல். வெள்ளை செம்பருத்திச் செடியின் பின்னிருந்து குரல் கேட்டது. எட்டிப் பார்த்தாள்; செடியின் அடியிலிருந்து முளைத்து வந்த கிளையை வெட்டிக் கொண்டிருந்தார். வாடித் துவண்டு கிடக்கும் வெள்ளை செம்பருத்தி இதழ்களைப் போல அவர் தலைமுடி சரிந்து கிடந்தது. சிரிப்பு வந்தது பார்க்கையில்.

''ஏன் இவ்வளவு நேரம்?'' கை கழுவி விட்டு வந்தார். ''நீ சாப்பிட்டியா?''

''இன்னும் இல்லை.''

''நேரமாச்சே... நீ சாப்பிட்டுட்டு எடுத்துட்டு வந்தா என்னவாம்? சரி வா''

சாப்பிடும் இடத்துக்குப் போன பிறகும் கூட, சாப்பிடவே மனம் வரவில்லை வினுவுக்கு.

''ஏன்மா.. என்ன ஆச்சு?'' அப்பா அவள் தலையை வருடினார். விம்மிக் கொண்டே அவர் தோளில் சாய்ந்தாள். ''என்ன

அம்மு... ஏன் அழறே...?''

''ஒண்ணுமில்லே...'' - கண்ணீரைத் துடைத்துவிட்டுச் சிரித்தாள். மூடுவெயில் அடிப்பது போலிருந்தது அவள் முகம்.

''ஆஃபீஸுக்கு ரெண்டு நாள் லீவு சொல்லிக்கலாம்... நீ வேணா இன்னைக்கு அக்கா வீட்டுக்குப் போ... அத்தையும் உன்னைக் கூப்பிட்டுட்டே இருக்கா...''

''எதுக்கு டாக்டர் எக்ஸ்ட்ரா மாத்திரை தர்றீங்க?''

''அஞ்சு ரூபாய் சில்லறை இல்லை!''

– அம்பை தேவா



ஒன்றரை மணி நேரப் பயணம். ஊரில் போய் இறங்கியதும்தான் தோன்றியது. மாற்றுடை கூட எடுத்துக்கொண்டு வரவில்லையே. வீட்டை அடைந்து அளிக் கதவைத் திறந்து கொண்டு, வழியெங்கும் சரத்தில் வெயில் மின்னிக் கொண்டிருந்த நடைபாதையைக் கடந்தாள்.

வேப்பமரத்தின் அருகே தண்ணீர் பிடித்துக் கொண்டிருந்தாள் அனுஷ்யா அக்கா; வினுவுக்குப் பிடித்த அரக்கு நிற நைட்டி அணிந்து கொண்டு. வினு ஊஞ்சலாடும் பலகை மரத்தடியில் கிடந்தது. ஊஞ்சல் கயிறு சுருட்டி கிளையில் செருகப்பட்டிருந்தது. அத்தை சற்றுத் தள்ளி மல்லிகைப் பந்தலுக்குக் கீழ் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருந்தார்.

அக்காதான் சத்தம் கேட்டு முதலில் பார்த்தாள். ''ஹை... என்ன தங்கம் திடீர்னு வந்திருக்கு...?'' முகமெல்லாம் சிரிக்க முன்னே வந்தாள். அவள் வரும்முன்னே வினு தாவிச் சென்று, ''அனுக்கா'' எனக் கட்டிக் கொண்டாள். தோளில் முகம் சாய்த்து கண்ணீர் பெருக்கினாள். அக்கா பதறிப் போனாள்.

அத்தையும் பதறி விட்டார். அருகில் வந்து இருவரையும் அழைத்துக் கொண்டு தாழ்சாய்வில் அமர்ந்தார். வினுவை அருகில் இழுத்து அணைத்தவாறே, ''என்ன அம்மை... என்ன ஆச்சு?'' என்றார். அவர் முகத்தை நிமிர்ந்து பார்த்தவள், அவர் மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். இளம் பச்சை நிறச் சேலையெங்கும் வீசுவது அத்தை பூசிக் கொள்ளும் சந்தனப் பவுடர் வாசமா அல்லது அத்தையின் வாசமே தானோ? ஏன் என்றே சொல்லத் தோன்றாது ஏங்கி ஏங்கி அழுதாள். கொஞ்சம் தாபம் குறைந்தது போலிருந்தது. அக்காவும், அத்தையும் கசிந்திருந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டனர் அவள் பார்க்கும் முன்.

நிமிர்ந்து பார்த்த வினு மெதுவாகப் புன்னகைத்தாள். தோட்டத்து முள் வேலியில் உட்கார்ந்து மஞ்சள் மூக்கைக் கூர் தீட்டிக் கொண்டிருந்த ஒற்றை மைனா தலையைத் திருப்பி இவளைப் பார்த்துக் கொண்டிருந்தது. வினுவுக்கு இப்போது கொஞ்சம் வெட்கமாகக் கூட இருந்தது. ●

ஸ்டார்ட்... கேமரா... ஆனந்த்!

# அந்தமான் காதலன்!

5

ஆர்வத்துடனும் கடுமையான உழைப்புடனும் செய்கிற வேலைக்கு எப்போதுமே நல்ல பலன் உண்டு. கல்கி குழுவுடன் சென்று காதலான ஆர்வத்துடன் நான் எடுத்த புகைப்படங்கள் அட்டையிலும் உள்ளேயும் வெளியாகி இருந்தன. நான் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அடுத்த சில வருடங்களில், நான் எடுத்த 98 வண்ணப்படங்கள் கல்கியில் அட்டைப் படங்களாக வெளியானதும், சுமார் இரண்டாயிரம் படங்கள் உள்பக்கங்களில் வெளியானதும் மிகவும் பெருமைக்குரிய விஷயமாக நினைக்கிறேன்.

கல்கி தவிர அசைடு, இந்தியா டுடே (ஆங்கிலம்) போன்ற பத்திரிகைகளுக்கும் படம் எடுத்துக் கொண்டிருந்தேன். மனத்துக்குப் பிடித்த ஃபோட்டோகிராஃபி வேலை, பல ஊர்களுக்குச் சென்று, பலதரப்பட்ட மக்களைச் சந்திக்கும் வாய்ப்பு இவையெல்லாம் என்னை ஈர்த்தன. எனவே, பெரிய பத்திரிகை எதிலாவது முழு நேரப் பத்திரிகை புகைப்படக்காரராகச் சேர்ந்து, பணிபுரிய வேண்டும் என்பதுதான் என் லட்சியமாக இருந்தது. அப்போது இந்தியா டுடே பத்திரிகையின் தமிழ்ப் பதிப்பு ஆரம்பிக்கப் போகிறார்கள் என்றும், அதற்காக ஸ்டாஃப் ஃபோட்டோகிராஃபரை நியமிக்கப் போகிறார்கள் என்றும் தெரியவந்தது.

நான் எடுத்து பத்திரிகைகளில் வெளியான மிகச் சிறந்த, வெரைட்டியான இருபது புகைப்படங்களைத் தேர்ந்தெடுத்து, ஒரு ஆல்பம் தயாரித்து, பயோ-டேட்டாவுடன் இந்தியா டுடேவின் டெல்லி அலுவலகத்துக்கு அனுப்பி வைத்தேன். சில நாட்கள் கழித்து ஃபோட்டோ



எடிட்டர் பவான் சிங் டெலிஃபோனிலேயே இன்டர்வியூ செய்தார். விரைவில் பதில் கடிதம் அனுப்புவதாகச் சொன்னார். எனக்கு என் மீது இருந்த அதீத நம்பிக்கையால் - அதை ஒரு விதமான திமிர் என்று சொன்னாலும் தப்பில்லை... என் நண்பர்களிடம் இந்தியா டுடேவில் சேரப் போவது பற்றிப் பெருமையாகச் சொன்னேன்.

அடுத்த சில நாட்களில் ரவி சங்கரன் என்ற ஃபோட்டோகிராஃபரைத் தேர்ந்தெடுத்துவிட்டார்கள் என்று அறிந்தபோது, அந்தத் தோல்வியை என்னால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை. விசித்திரம் என்னவென்றால், அந்த ரவி சங்கரன், பத்தாண்டுகள் கழித்து, பி.சி. ஸாரிடமே உதவியாளராக வந்து சேர்ந்தார். கேமரா மீது கடும் வெறுப்பு; பத்திரிகைகள் மீது அதைவிட அதிக வெறுப்பு.

வீட்டில் யாரிடமும் எதுவும் பேசவில்லை. அசைடில் இருந்து, ''அவசரமாக ஃபோட்டோ எடுக்க வேண்டும். வர முடியுமா?'' என்று ஃபோன் வந்தது. வெறுப்புடன், ''எனக்கு கடுமையான ஜுரம். ஸாரி!'' என்று சொல்லிவிட்டேன்.

**வ**ங்காள விரிகுடாவில் அந்த பிரமாண்டமான பயணிகள் கப்பல் எறும்பு போல ஊர்ந்துகொண்டிருந்தது. ஹர்ஷ்வர்தன் என்ற அந்தக் கப்பலின் மேல்தட்டில், திறந்தவெளியில் நீல வானத்தை வெறித்துப் பார்த்துக்கொண்டு உட்கார்ந்துகொண்டிருந்தேன்.

எங்கே போகிறேன்?

அந்தமானுக்கு.

எதற்காக?

தெரியாது. எனக்கு ஊரில் இருக்கப் பிடிக்கவில்லை, யாரைப் பார்த்தாலும், எதைப் பார்த்தாலும் வெறுப்பாக இருந்தது. எங்கேயாவது சில நாட்கள் தனியாக இருக்க வேண்டும் என்று தோன்றியது. அதனால் கிளம்பிவிட்டேன். அப்போதுதான் உறைத்தது. அட! அம்மாவிடம் கூட சொல்லாமல் புறப்பட்டு வந்துவிட்டோமே!

அதிலும் ஒரு விசித்திரம் பாருங்கள்! ஃபோட்டோகிராஃபி மீதே ஏற்பட்ட வெறுப்பில்தான் அந்தமான் புறப்பட்டிருக்கிறேன். ஆனாலும் நாலைந்து துணிமணிகளுடன், என் கேமராக்களையும், கலர், கறுப்பு-வெள்ளை ஃபிலிம் ரோல்களையும் அள்ளிப் போட்டுக்கொண்டுதான் வந்திருந்தேன்.

கப்பலில் மிகவும் மாறுபட்ட வாழ்க்கை. வேளா வேளைக்குச் சாப்பாடு, தூக்கம், கப்பலின் திறந்தவெளி அடுக்கில் உட்கார்ந்து கடலையும், வானத்தையும் ரசிப்பது; உடன் பயணிக்கும் பலதரப்பட்ட மக்களைக் கவனிப்பது என்று நேரம் போனதே தெரியவில்லை.

''**எ**ன்ன ஸார் எழுந்திட்டீங்களா? சூடா ஒரு இஞ்சி டீ தரட்டுமா?'' அந்த மானை அடுத்த இன்னொரு குட்டித் தீவான லிட்டில் அந்தமானில், டீக்கடை வைத்திருக்கும் தமிழ்நாட்டுக்காரர் சந்துரு

**கே.வி.ஆனந்த்**

# 'இனிமேல் கேமராவை நம்பி நம் வாழ்க்கை இருக்கக்கூடாது. ஃபோட்டோகிராஃபி நம் தொழில் இல்லை'



✱ நண்பர் சந்துருவுடன்...

கேட்டார். கப்பலில் வரும்போது சந்துரு எனக்கு யதேச்சையாகத்தான் அறிமுக மானார். ''கண்டிப்பா லிட்டில் அந்த மானுக்கு வாங்க'' என்று தன் முகவரியைக் கொடுத்தார்.

இரண்டு நாளில், போர்ட்பிளேர் எனக்கு போரடித்துவிட்டது. அதிக டூரிஸ்ட் நெரிசல் இல்லாத இடம் தேடினேன். லிட்டில் அந்தமான் வந்து சேர்ந்தேன். நான் இப்போது சந்துருவின் கெஸ்ட். அவரது டீக்கடைதான் எனது கெஸ்ட் ஹவுஸ்.

லிட்டில் அந்தமான் 'ஓங்கிஸ்' என்ற பழங்குடி மக்கள் வசிக்கும் பகுதி. அவர்கள் பார்ப்பதற்கு ஆப்பிரிக்க இனத்தவர்கள் போல இருப்பார்கள். விசாலமான பீச். அமைதியான சூழ்நிலை. இயற்கை அழகுக்குக் குறைச்சலில்லை. ஒருசில இடங்களில் நானும் இயற்கையும் மட்டுமே இருந்தோம்.

அதில் ஒன்றுதான் 'ஸிங்' தீவு. 'செல்லமே' படத்தில் வரும் விஷால்-ரீமாசென் பாடல் காட்சிக்காக இயக்குநர் மனத்தில் நினைத்திருக்கும் ஒரு லொகேஷனைச் சொன்னார். 'மொரிஷியஸ்' தீவில் தான் அதுபோல் இருக்கும். அங்கு செல்ல அதிகம் செலவாகும் என்றபோது, எனக்கு அந்தமான் நினைவு வந்தது. சுற்றுலாப் பயணிகள் கூட அதிகம் எட்டிப் பார்க்காத ஸிங் தீவில் எடுத்த அந்தப் பாடல் காட்சி படத்துக்கு ஹைலைட்டாக அமைந்தது.

நிக்கோபார், கார் நிக்கோபார், இந்திரா காந்தி முனை என்று சுற்றிக் கொண்டு, 'இனிமேல் கேமராவை நம்பி நம் வாழ்க்கை இருக்கக்கூடாது. ஃபோட்டோ கிராஃபி நம் தொழில் இல்லை' என்று நினைத்துக் கொண்டிருந்தபோது, திருச்சியில் பார்த்த மணிரத்னத்தின் 'நாயகன்' படம் நினைவுக்கு வந்தது. நான் ஃப்ரேம் பை ஃப்ரேம் ரசித்த படம். அடுத்து என்ன செய்வது என்று தீர்மானித்து விட்டேன்.

அதற்குப் பிறகு என் மனசு பரபரத்தது. பாக்கெட்டில் இருந்த பணத்தைத் திரட்டிப் பார்த்ததில் 1500 ரூபாய் தேறியது. உடனடியாக சென்னைக்கு ஒரு விமான டிக்கெட் வாங்கினேன்.

பி.சி.ஸ்ரீராமைச் சந்தித்து, அவரிடம் அசிஸ்டென்ட்டாகச் சேர்ந்துவிடத் துடித்தேன். வீடு திரும்பியதும், அவருக்கு ஃபோன் செய்து அறிமுகப்படுத்திக் கொண்டேன். அவருக்கு என்னைத் தெரிந்திருந்தது. ''நீங்க கல்கி, அசைடுக்கெல்லாம் ஃபோட்டோ எடுப்பீங்களே!'' என்றார். அவரைச் சந்திக்க விரும்புவதாகச் சொன்னதும், மறுநாள் வீட்டுக்கு வரச் சொன்னார். ஆவலுடன் புறப்பட்டேன்.

**(ஆக்ஷன் தொடரும்)**

எழுத்தாக்கம்: **எஸ்.சந்திரமௌலி**

# புறா...புறா... 'ஷோ'புறா!



''தலைவரோட கறுப்புப் பூனைகள் தனித்தனியா நிக்கறாங்களே... ஏன்?''

''அதுலயும் நிறைய கோஷ்டிகள் இருக்கு!''

- அம்பை தேவா



''சாப்பாட்டுல துவரம் பருப்பு, இஞ்சி, பூண்டு எல்லாம் சேர்க்கக் கூடாது!''

''அதெல்லாம் விக்கிற விலையில சேர்க்கற மாதிரியா இருக்கு டாக்டர்?''

- எஸ்.முகம்மது யூசுப்



''நமது மன்னருக்கு ஆஸ்துமா தொந்தரவு உள்ளதாம்..!''

''அப்படியென்றால், 'பனி'ப்போருக்குக்கூட அவர் வாய்ப்பில்லையென்று சொல்லு!''

- எஸ்.சங்கர்





''இந்தப் புறா ரொம்ப சோம்பேறியா... ஏன்?''

''அது கொண்டு வந்த ஓலைல போன வருஷ தேதி போட்டிருக்கே!''

- அம்பை தேவா





**இங்கே 600 படகு வீடுகள் உள்ளன. ஆனால், இவற்றில் பாதிதான் அரசு அனுமதி பெற்றவை.**

''தெய்வத்தின் பூமின்னு பேரு. சந்தோஷமா இங்கே வர்ற பயணிகளை நிஜமாவே தெய்வத்துகிட்டே அனுப்பிடு வாங்க போலிருக்கு'' என்கிறார் பெயர் வெளியிட விரும்பாத அந்த அரசு அலு வலர். அவர் சொல்லும் செய்திகள் நமக்கு அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சியை உண்டாக்கு கின்றன.

காஷ்மீருக்கு அடுத்து இந்தியாவில் படகு வீடுகளுக்குப் புகழ் பெற்ற இடம் கேரளாவின் ஆலப்புழாவும், கோட்டைய மும். இங்கே 600 படகு வீடுகள் உள்ளன. ஆனால், இவற்றில் பாதிதான் அரசு அனுமதி பெற்றவை. மீதமுள்ள படகு களுக்கு முறையான லைசென்ஸ் இல்லை. விஷயம் தெரியாமல் இதில் பயணம் செய்யும் சுற்றுலாப் பயணிகளுக்கு எதிர் பாராத விதமாக ஏதாவது விபத்து ஏற்பட் டால் எந்தவித இழப்பீடும் கிடைக்காது. காவல் நிலையத்தில் புகார் செய்தாலும் இந்தப் படகுகளைச் செலுத்துபவர்கள் அலட்டிக் கொள்வதில்லை. காரணம், இத்தகைய படகுகளுக்கு இன்ஸ்பெக்டர் ஆப் போட் (IB) விதிக்கும் அபராதம் ஐந்நூறு ரூபாய் மட்டுமே. அதைச் செலுத்திவிட்டு விபத்தான படகைச் சரிசெய்து மீண்டும் கூலாக ஓட்ட ஆரம் பித்து விடுகிறார்கள். சிலர் அந்த அபராதத் தொகையைக் கூடச் செலுத்தாமல் 'டிமிக்கி' கொடுத்து விடுவதுண்டாம்.

''வெள்ளையர் காலத்தில் ஆலப்புழா, கோட்டையம் பகுதிகளிலிருந்து படகுகள் மூலமா பொருட்களை நீண்ட தூரத்துக்குக் கொண்டு போவாங்க. அப்படி உருவானது தான் இந்தப் படகு வீடுகள். அப்போ உருவாக்கின சட்டமே இப்பவும் இந்தச் சுற்றுலாப் படகு வீடுகளுக்கு நடை முறைப்படுத்தப்படுது. இதுல ஏகப்பட்ட ஓட்டைகள். அது இந்த மாதிரியான திருட்டுப் படகு ஓட்டறவங்களுக்குச்



# பயணிகள் ஜாக்கிரதை!

சாதகமா இருக்கு. சிலர் ஒரு படகுக்கு மட்டும் லைசென்ஸ் வாங்கிட்டு அதை வெச்சே பல படகுகளை ஓட்டறாங்க. சமீபத்துல ஒரு நேர்மையான அதிகாரி அதிரடி சோதனை நடத்தி முப்பது படகுகளைப் பிடிச்சு சுற்றுலா காவலர்களிடம் ஒப்படைச்சார்'' என்கிறார் அந்த அரசு அலுவலர்.

இது பணம் கொழிக்கும் தொழில். அதனால் பல மலையாள நடிகர்களும், வெளிநாட்டிலிருந்து தாயகம் திரும்பியவர்களும் தங்கள் கருப்புப் பணத்தை இந்தப் படகு வீடுகளில் முதலீடு செய்துள்ளார்கள். அவர்கள் அதிகாரிகளை தனியாகக் கவனித்து விடுவதால் திருட்டுப் படகு வீடுகள் தாராளமாக உலாவருகின்றன.

இந்த விஷயத்தில் சமீபத்தில்தான் கேரள அரசு விழித்துக் கொண்டுள்ளது. இப்போது முறையாக அனுமதி வாங்கினால்தான் காயலில் படகோட்ட முடியும் என்ற கட்டாயத்தை நிர்வாகம் நடைமுறைப்படுத்தியதால், புதிதாக நூறு படகுகளுக்கான அனுமதி விண்ணப்பங்கள் நிலுவையில் வைக்கப்பட்டுள்ளன.

இந்தியாவிலேயே அதிக அந்நியச் செலவாணியை ஊதியமாக ஈட்டுகிற மாநிலங்களில் கேரளாவும் ஒன்று. விலை மதிப்பற்ற மனித உயிர்கள் விஷயத்தில் அரசு அக்கறை செலுத்தி முறையான நடவடிக்கையை மேற்கொள்ளாவிட்டால் வருவாய் இழப்பு மட்டுமின்றி சுற்றுலாப் பயணிகளின் நம்பிக்கை இழப்பையும் சந்திக்க வேண்டியதிருக்கும். கேரளாவுக்குச் சுற்றுலா போகும் பயணிகள் ஜாக்கிரதை.

- த.இ.தாகூர்

நேத்ரா செல்ஃபோனில் பேசிக் கொண்டிருந்தாள். குரலில் கொஞ்சல்.

''என்னங்க...! நான் டப்பிங் பேசி முடிக்க எப்படியும் மதியம் ரெண்டு மணி ஆயிடும். அதுவரைக்கும் நீங்க ஏன் பட்டினி கிடக்கணும்? ஹாட்பேக்ல சப்பாத்தி இருக்கு சாப்பிடுங்க.''

''எனக்கு இப்ப பசியில்லை. வீட்ல தனியா உட்கார்ந்து இருக்க போர் அடிக்குது.''

''புது சி.டி. ஒண்ணு வந்திருக்கு. அதைப் போட்டுப் பாருங்க..''

''நேத்ரா, நான் இப்போ டீ.வி.யோ சி.டி.யோ பார்க்கிற மூடில் இல்லை. அந்த டைரக்டர் ராஜலிங்கம் என்னை யூனிட்டி லிருந்து கழற்றி விட்டுட்டான். வெளிப்புறப் படப்பிடிப்புக்கு நான் வரக்கூடாதாம்.''

''எதனால அப்படிப் பண்ணினான்?''

''நான் புத்திசாலித்தனமாய் ஏதாவது ஒரு லீன் சொன்னா அது அவனுக்குப் பிடிக்கிறது இல்லை.''

''சரி விடுங்க. அவன் ஒரு குடிகார டைரக்டர். அவன் இல்லேன்னா என்ன... இந்த சினி ஃபீல்டில் எத்தனை டைரக்டர்கள் இருக்காங்க. சீக்கிரமே ஒரு நல்ல டைரக்டர் உங்களைக் கூப்பிட்டு அஸிஸ்டெண்டாய் சேர்த்துக்குவார்.''

நேத்ரா பேசிக்கொண்டிருக்கும்போதே புரொடியூஸர் அந்தப் பக்கமாய் வந்தார்.

''என்னம்மா நேத்ரா, இன்னுமா உன்னோட புருஷன்கிட்டே பேசிட்டிருக்கே? சரியாப் போச்சு. உள்ளே போம்மா. ரீ-ரிக்கார்டிங் இன்ஜினியர் உன்னைத் தேடிக்கிட்டு இருக்கார்.''

''இதோ போறேன் ஸார்.''

நேத்ரா செல்ஃபோனை அணைத்துவிட்டு ரிக்கார்டிங் ரூமுக்குள் நுழைந்தாள்.




ஒரு மணி நேரம் டப்பிங் பேசி முடித்திருந்தபோது வைப்ரேஷனில் இருந்த செல்ஃபோன் இலேசாய் உறுமி அதிர்ந்தது.

நேத்ரா எடுத்து, அழைப்பது யார் என்று பார்த்தாள். அவள் குடியிருக்கும் ஃப்ளாட் ஓனர்ஸ் அஸோஸியேஷன் தலைவர்

# ரெட் ரோஸ்



கிருபாகரன்.

''குட் ஆஃப்டர்நூன் ஸார்.''

''ஸாரி... நேத்ரா. நான் உனக்கு குட் ஆஃப்டர்நூன் சொல்லக்கூடிய நிலையில் இல்லை. உன்னோட கணவர் ராஜ்பாபு இப்போ உயிரோடு இல்லை. மே..பி...

சூசையிட். நீ உடனே புறப் பட்டு வாம்மா.''

''அ...ய்..யோ... ஓ...ஓ.. ஓ...ஓ...'' என்று பெரிதாய் வீறிட்டு அலறிய நேத்ரா அப்படியே சரிந்து தரையில் சாய, யூனிட் மொத்த மும் அவளை நோக்கி ஓடி வந்தது.

இன்ஸ்பெக்டர் ராஜேந்திரனிடம் ஒரு கேஸ் சம்பந்தமான வாக்குவாதத் தில் ஈடுபட்டிருந்தாள் சாதுர்யா.

அப்போது மேஜையிலிருந்த டெலி ஃபோன் தன் தொண்டையைத் திறந்தது. ரிஸீவரை எடுத்தார் ராஜேந்திரன்.

''ஸார்! வெஸ்ட் மாம்பலம் காருண்யா நகர் ரெட்ரோஸ் அபார்ட்மெண்ட் ஓனர்ஸ் அஸோசியேஷன் பிரஸிடெண்ட் கிருபா கரன் பேசறேன். எங்க குடியிருப்பின் 260ம் நம்பர் ஃப்ளாட்டில் ராஜ்பாபு என்கிற சினிமா அஸிஸ்டெண்ட் டைரக்டர் ஒருத்தர் தற்கொலை பண் ணிட்டார். உடனே ஸ்பாட்டுக்கு வர்றீங்களா?''

ராஜேந்திரனும், சாதுர்யாவும் புறப் பட்டார்கள்.

ரெட்ரோஸ் அபார்ட்மெண்ட்ஸ். மேற்கு மாம்பலத்தின் மையத்தில் இருந் தது. இன்ஸ்பெக்டர் ராஜேந்திரனும், சாதுர்

# அபார்ட்மெண்ட்!

ராஜேஷ்குமார்

யாவும் ஸ்தலத்துக்குப் போய்ச் சேர்ந்த போது நேத்ரா அழுது அழுது ஓய்ந்து போய் பிரமை பிடித்த தினுசில் அபார்ட்மெண்ட் டைச் சேர்ந்த பெண்களுக்கு நடுவில் உட் கார்ந்திருந்தாள்.

''நான்தான் ஸார் கிருபாகரன். இந்த ஃப்ளாட் ஓனர்ஸ் அஸோசியேஷனுக்கு பிரஸிடெண்ட்'' சிவப்பாய் நல்ல உயரத் தில் வழுக்கைத் தலையோடு இருந்த நபர் ராஜேந்திரனை எதிர்கொண்டார்.

ஹால் சோபாவில் மல்லாந்து கிடந்

தான் ராஜ்பாபு. கடைவாயில் நூலிழை அளவுக்கு ரத்தம் வழிந்து உறைந்து போயிருந்தது.

''லெட்டர் ஏதாவது?''

''லெட்டர் எதுவும் இல்ல ஸார். இந்தத் துண்டு பேப்பர் மட்டும் டீபாயின் மேல் இருந்தது.''

ஊதா நிற ஸ்கெட்ச் பேனாவில் எழுதப் பட்ட இரண்டு வரிகள் கண்ணில் அடித்தன.

சினிமா ஜெயிக்கத் தானே தவிர தோற்க அல்ல; சாதுர்யா ராஜ்பாபு



வின் உடலைப் பார்த்துவிட்டு கிருபா கரனிடம் திரும்பினாள்.

''ராஜ்பாபுவோட பாடியை மொதல்ல பார்த்தது யாரு?''

''போஸ்ட்மேன் லெட்டர் கொடுக்க வந்தபோது காலிங் பெல்லை அழுத்தியிருக்கார். கதவை யாரும் திறக் கலை. எதிர் ஃப்ளாட்ல இருக்கிற பிரதாப்கிட்டே விஷயத்தைச் சொல்லி லெட்டர் கொடுத்திருக்கார். உள்ளே டீ.வி. ஓடற சத்தம் கேட்டதால பிரதாப் ஒரு ஸ்டூலைப் போட்டு வெண்டிலேட்டர் வழியே உள்ளே பார்த்திருக்கார். ஹால் சோபாவில் ராஜ்பாபு அலங்கோலமாய்க் கிடக்கிறதைப் பார்த்துட்டு சத்தம் போட விஷயம் எல்லார்க்கும் தெரிய வந்தது.''

''யார் அந்த பிரதாப்?'' ராஜேந்திரன் கேட்க,

''நான்தான் ஸார்'' என்றபடி கும்பலிலிருந்து முன்னால் வந்தான் அந்த இளைஞன். வயது முப்பது இருக்கலாம். கண்களில் ரிம்லெஸ் ஸ்பெக்ஸ்.

சாதுர்யா அவனை நெருங்கினாள்.

''என்ன பண்றீங்க பிரதாப்...?''

''மெடிக்கல் ட்ரான்ஸ்கிரிப்ஷன் சென்டர் ஒண்ணை வெச்சு நடத்தி வர்றேன் மேடம். சினிமாவில் நிறைய சாதிக்கணும் என்கிற வெறி ராஜ்பாபுவுக்கு இருந்தது. பட்... அவருடைய எதிர்பார்ப்புக்கு ஏற்ற மாதிரி எதுவும் அமையாததால வெக்ஸ் ஆயிட்டார்னு நினைக்கிறேன். நான் வெண்டிலேட்டர் வழியா பார்த்தபோது அவரோட உடம்புல அசைவு இருந்தது. நான் சத்தம் போட்டதுல எல்லாரும் வந்துட்டாங்க.

## சாதுர்யா சக்ஸஸ் - 4

**சாதுர்யா பேசறேன்..**

**நான் ஸ்வேதாவின் உடலைப் பரிசோதித்த போது அவளது தலை முடியில் பெயிண்ட் ஒட்டியிருப்பதைக் கண் டேன். ஜெகதீஷின் அலுவலகத்துக்குச் சென்று பார்த்தபோது சுவரில் தலைமுடி ஒன்று ஒட்டியிருந்தது. அதை எடுத்து லேப்-டெஸ்ட் செய்ததில் ஸ்வேதாவின் தலைமுடிதான் என்று தெரிந்தது. அங்கிருந்த பெயிண்டரை விசாரித்ததில் ஜெகதீஷ் இரவு பத்து மணி வரை அங்கே இருந்தது தெரிந்தது. ஸோ, ஜெகதீஷ்தான் கொலையாளி என்பதைச் சுலபமாக யூகிக்க முடிந்தது. நான் கொடுத்த க்ளூவை வைத்து சரியான விடையை எழுதிய உங்களில் ஐந்து பேரின் விவரம் வட்டமேஜை பகுதியில்...**

கதவை உடைச்சு உள்ளே போனோம். இதே அபார்ட்மெண்ட்ல இருந்த டாக்டர் சுதாகர்ராவைக் கூப்பிட்டுப் பார்க்கச் சொன்னோம். அவர் வந்து பார்த்துட்டு இருக்கும்போதே ராஜ்பாபு இறந்துட்டார்.''

சாதுர்யா பார்வையைத் துரத்தினாள்.

''டாக்டர் சுதாகர்ராவ் இருக்காரா?''

அறுபது வயது சுதாகர் ராவ் முன்வால் வந்தார்.

''மை செல்ஃப் மேடம்.''

''எப்படி மரணம் டாக்டர்?''

''நான் பரிசோதித்துப் பார்த்த அளவில் ராஜ்பாபுவுக்கு சடன் மாஸிவ் அட்டாக்.''

''ஸோ... மரணம் இயற்கை.''

''மே... பி... பட் எதுக்கும் போஸ்ட்மார்ட்டம் பண்ணிப் பார்த்துடறது பெட்டர். பாய்ஸனிங் இருக்கலாமோன்னு ஒரு சின்ன சந்தேகம்.''

''தற்கொலை பண்ணிக்கிற எண்ணம் ராஜ்பாபுவுக்கு இருந்திருந்தா அது அவருடைய மனைவி நேத்ராவுக்குத் தெரிஞ்சிருக்கலாம்'' சொன்ன சாதுர்யா நேத்ராவை நோக்கிப் போனாள்.

அழுது அழுது உலர்ந்து போயிருந்த நேத்ராவுக்கு சாதுர்யாவைப் பார்த்ததும் புதிதாய்க் கண்ணீர் சுரந்தது. சாதுர்யா அவளுடைய தோளைத் தொட்டாள்.

நேத்ராவுக்குத் தொண்டை அடைத்துக் கொண்டது.

''நா... நாங்க... ரெ... ரெண்டு பேரும் காதலிச்சுக் கல்யாணம் பண்ணிக்கிட்டவங்க. எங்களுக்குள்ளே எந்தப் பிரச்னையும் இல்லை. ஒரு மணி நேரத்துக்கு முந்தி நான் டப்பிங் தியேட்டரில் இருந்தபோது எனக்கு ஃபோன் பண்ணி சந்தோஷமாய்ப் பேசினார். என்னோட கணவர் ஒரு உதவி டைரக்டராய் டைரக்டர் ராஜலிங்கத்துகிட்டே வொர்க் பண்ணிட்டிருந்தார். அந்த டைரக்டர் தன்னை யூனிட்டிலிருந்து கழற்றி விட்டுட்டதாய்ச் சொல்லி கொஞ்சம் மனம் கஷ்டப்பட்டார். அதுக்காக அவர் தற்கொலையெல்லாம் பண்ணிக்கிற அளவுக்குக் கோழையில்லை.''

''ஆனா, 'சினிமா ஜெயிக்கத்தானே தவிர தோற்க அல்ல'ன்னு ஒரு துண்டுச் சீட்ல எழுதி வெச்சிருக்காரே...?''

''அதுதான் எனக்கும் புரியலை. ஆனா, அவர் மனசு சங்கடப்படும்போது ஸ்கெட்ச் பேனாவை எடுத்து எதையாவது எழுதிட்டிருப்பார்.''

''சரி...! உன் கணவரோட செல்ஃபோன் எங்கே?''

''அவரோட அறையில் இருக்கும்.''

''அவரோட செல்ஃபோனை செக் பண்ணி இன்கம்மிங் கால்ஸ் யார் யார்கிட்டேயிருந்து வந்தது... இவர் யார் யாருக்கு ஃபோன் பண்ணினார் என்கிற தகவல்களை கலெக்ட் பண்ணினா ஏதாவது க்ளூ கிடைக்கலாம்'' சொன்ன சாதுர்யா வீட்டுக்குள் நுழைந்து ராஜ்பாபுவின் அறையில் மேஜையின் மேல் இருந்த அந்த லேட்டஸ்ட் செல்ஃபோனை எடுத்து வந்தாள். அதனை உசுப்பி, 'கால் ரெஜிஸ்டர்'ஐ செக் செய்தாள்.

''ஓ! இதிலேயே ரெக்கார்டட் ஃபெசிலிடி இருக்கா? தென்... நோ... ப்ராப்ளம். அவர் உன்கிட்டே என்ன பேசினார்ன்னு நான் 'ஆன்' பண்ணிப் பார்க்கலாமா?''

நேத்ரா தலையசைக்க சாதுர்யா தள்ளி நின்று ராஜ்பாபு-நேத்ராவின் ரெக்கார்டட் வாய்ஸைக் கேட்டு விட்டு வந்தாள்.

''ரெண்டு பேரும் செல்லமாய்ச் சண்டை போட்டு இருக்கீங்க. அவ்வளவுதான். பட்... காலை பதினொரு மணியிலிருந்து பன்னிரண்டு மணி வரைக்கும் பத்தொன்பது பேர்களுக்கு தொடர்ச்சியா

**"நான் பரிசோதித்துப் பார்த்த அளவில் ராஜ்பாபுவுக்கு சடன் மாஸிவ் அட்டாக்"**

ஃபோன் பண்ணியிருக்கார். அவங்க யார் யார்ன்னு விசாரிக்கணும். அதுக்குள்ளே போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட்ல 'மரணம் இயற்கையானது'ன்னு வந்துட்டா பிரச்னை யில்லை. செல்ஃபோன் என்கிட்டேயே இருக்கட்டும். என்னோட இன்வெஸ்டிகேஷன் முடிஞ்சதும் கொடுத்துடறேன்''

நேத்ரா தலையாட்டினாள்.

**ம**றுநாள், ராஜ்பாபுவின் காரியங்கள் முடிந்து நேத்ராவின் ஃப்ளாட் நிசப்தமாய் இருக்க சாதுர்யா உள்ளே வந்தாள்.

''மேடம்... என் கணவரோட போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட்ல என்ன இருந்தது?''

''மரணம் இயற்கையானது. மாஸிவ் அட்டாக்.''

''பார்த்தீங்களா மேடம்... அது தற்கொலையில்லை?''

சாதுர்யா புன்னகைத்தாள். ''தற்கொலை யில்லை. ஆனால், நீயும் எதிர் ஃப்ளாட் பிரதாப்பும் சேர்ந்து திட்டம் போட்டுப் பண்ணின கொலை.''

''நோ... ஓ...ஓ...ஓ...ஓ!''

''நீ 'நோ'ன்னு சொல்லி பிரயோஜனம் இல்லை. உன்னோட இல்லீகல் லைஃப் பார்ட்னர் 'யெஸ்'ன்னு சொல்லி ஒப்புதல் வாக்குமூலம் கொடுத்துட்டு லாக்கப்ல உட்கார்ந்துட்டிருக்கான். அவன் எல்லாத்தையும் சொல்லிட்டான். உன்னோட கணவன் ராஜ்பாபு உண்மையிலேயே ஒரு உதவி டைரக்டர் கிடையாது. அவன் ஒரு 'பிம்ப்'ங்கிறதும் உன்னையே விபசாரத் தொழிலுக்கு உட்படுத்த முயன்றதையும் செக்ஸ் டார்ச்சர் பண்ணினதையும் அதைப் பொறுத்துக்க முடியாமே அவனைத் தீர்த்துக்கட்ட முடிவு எடுத்ததையும் போலீஸ் விசாரணையில் கக்கிட்டான். எல்லாத்துக்கும் மேலாய் ஒருத்தருக்கு ஹார்ட் அட்டாக்கை வரவழைக்கக்கூடிய அகோனைட் என்ற விஷத்தை உன் கணவன் சாப்பிட்ட உணவில் கலந்ததையும், விஷம் சாப்பிட்டதற்கான அறிகுறிகள் போஸ்ட்மார்ட்டம் ரிப்போர்ட்டில் தெரியாது என்கிற உண்மையையும், உன் கணவரோட செல்ஃபோனை அவனுக்குத் தெரியாமே பிரதாப்புக்கு எடுத்துக் கொடுத்து நேத்து மத்தியானம் பன்னிரண்டு மணியிலிருந்து அரை மணி நேரம் உன் கணவன் மாதிரியே பேச வெச்சதையும் சொல்லிட்டான்.''

நேத்ரா விக்கித்துப்போய் நிற்க, சாதுர்யா தொடர்ந்தாள். ''இத்தனையையும் திறமையா பண்ணின பிரதாப் அந்த செல்ஃபோனை மறுபடியும் ராஜ்பாபு அறையில் வைக்கும்போது ஒரு விஷயத்தை மறந்துட்டான். அது ரொம்பவும் ஒரு அற்பமான விஷயம்தான். ஆனால் அதுதான் அவனைக் காட்டிக் கொடுத்து முக்கிய சாட்சியாகவும் மாறிடுச்சு. அது என்னான்னு தெரிஞ்சுக்க நீ விரும்பறியா நேத்ரா?''

நேத்ரா கலவரமாய்த் தலையசைக்க, சாதுர்யா சொல்ல ஆரம்பித்தாள்.

## துப்பறியும் போட்டி-5

**சா**துர்யா என்ன சொல்லியிருப்பாள்? நேத்ராவையும் பிரதாப்பையும் மாட்ட வைத்த அந்தத் தடயம் என்ன? நீங்க கண்டுபிடிக்க வசதியாய் ஒரு க்ளூ.

***அந்தத் தடயம் கண்ணுக்குத் தெரியாது.***

போஸ்ட் கார்டு எடுங்க. விடையை எழுதுங்க. 'துப்பறியும் போட்டி - 5' என்று குறிப்பிட்டு கல்கி முகவரிக்கு அனுப்புங்க. ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**கடைசித் தேதி: 5.8.09**



''ஆஸ்பத்திரி பக்கம் போகவே பயமா யிருக்கு. தலைவலின்னு சொன்னா அந்த ஸ்கேன் எடுங்க, இந்த ஸ்கேன் எடுங்கன்னு ஏகப்பட்ட பணத்தைப் பிடுங்கிட்டு கடைசியில உங்க தலையில ஒண்ணும் இல்லைன்னு சொல்வாங்க. அது சரிதான். தலையில ஏதாவது இருந்திருந்தா இங்கே வந்திருப்போமான்னு மனசுல நினைக்கக்க வேண்டியதுதான். இப்படித்தான் இருக் காங்க இன்றைய டாக்டர்கள். ஆனால், இவங்கள்ல வித்தியாசமானவர் புஷ்ப வனம் டாக்டர்'' என்கிறார் மதுரை பொன்னி நகரைச் சேர்ந்த ஒருவர்.



# சேவை அல்ல; கடமை!



**''ஆண்டவன் கருணையில நல்லா இருக்கோம். நோய், இருக்கறவன் இல்லாதவன்னு பார்த்து வர்றதில்லையே,''**

மதுரை மருத்துவக் கல்லூரியில் படித்த வர் புஷ்பவனம். திருபுவனம், விருதுநகர், சோழவந்தான் அரசு மருத்துவமனைகளில் பணியாற்றி ஓய்வுபெற்றவர். தனியாக க்ளினிக் நடத்தி வரும் இவர், ஃபீஸாக வாங்குவது ஐந்து ரூபாய் மட்டுமே.

''முதல்ல மூணு ரூபாய்தான் வாங் கிட்டு இருந்தேன். சில்லறைத் தட்டுப்பாடு ஏற்பட்டதால ஜனங்களே அஞ்சு ரூபாயா வாங்குங்க டாக்டர்னு சொல்லிட்டாங்க. கேன்சர் நோயாளிகள், மூளை வளர்ச்சி குன்றியோரிடம் அதையும் வாங்கறதில்லை. ஆண்டவன் கருணையில நல்லா இருக்கோம். நோய், இருக்கறவன், இல்லாத வன்னு பார்த்து வர்றதில் லையே. இருக்கிறவங்க எவ்வளவு பணம் வேணும்னாலும் செலவு பண்ணி பார்த்துக் கறாங்க. இல்லாதவங்களுக்கு கவர்மெண்ட் ஆஸ் பத்திரி மட்டும்தான் கதி. ஏதோ நம்மால முடிஞ்ச சேவை. இதை சேவைன்னு கூடச் சொல்லக்கூடாது. நான் படித்த மருத்துவப் படிப்புக்கு செய்யற கடமை'' என்று பணிவுடன் சொல்கிறார் இந்த அஞ்சு ரூபாய் டாக்டர்!

- இருள்நீக்கியான்



# 2

''அரவிந்தன், அந்தப் பானைல இருந்து தண்ணி எடு''

சற்றே கூவலாக வெளிப்பட்டது பூரணியின் குரல்!

அரவிந்தன் மூலையிலிருந்த பானையில் இருந்து தண்ணீர் எடுத்து வந்தான். அதை வாங்கி அவர் முகத்தில் தெளித்த பூரணி, கண்களை மெல்லத் துடைத்தாள். நெஞ்சப் பகுதியை மெல்ல நீவினாள்.

அரவிந்தனுக்குள் கவலை எழுந்தது. 'தொலைக் காட்சிக்கான பேட்டி எடுக்கவே இருவரும் இங்கு வந்திருக்கிறோம். வந்த இடத்தில் இதென்ன சூழ்நிலை? ஏன் மயங்கினார்?' கேள்விகள் பரவின.

இடுப்பில் காவி நிற வேஷ்டியும், தோளில் காவித் துண்டும் அணிந்து, நரைத்து நீண்ட தாடியும் மீசையுமாய், நெற்றியில் திருநீறும் குங்குமமும் பளிச்சிட படுத்திருந்த

# சங்கராபுரம்

கிருஷ்ணமூர்த்தியை அலசின பூரணியின் விழிகள்!

'சுற்றிலும் பெரும் கட்டடங்கள்; கல்விக் கூடங்கள்; சின்ன நீர்த்தேக்கம்; சூரிய ஒளியால் இயங்கும் மின்சாதனங்கள்; மருத்துவமனை; ஆயுர்வேத வைத்திய சாலை; இசைப் பள்ளி; பூங்கா; வேத பாட சாலை; மூலிகைத் தோட்டம்; ஸாஃப்ட்வேர் நிறுவனம்; அடுக்கு மாடிக் குடியிருப்புகள்; ஜிம்; விளையாட்டு மைதானம்; கோயில்; தோட்டம்; வயல்... என்று திட்டமிட்டு அமைத்த தனி நகரம் இது! எதற்காகவும் வெளியே செல்ல வேண்டிய அவசியமில்லாத வாழ்க்கை!

**துறவி என்றால், லௌகீகமான வாழ்க்கை பற்றி அக்கறைப்படத் தேவையில்லை.**

நகரத்தின் வசதிகள் அனைத்தையும் இங்கே ஏற்படுத்தியுள்ள இந்த மனிதர், இப்படியொரு குடிசையில் ஏன் வசிக்கிறார்?

15 x 15 அளவுள்ள சிறிய குடில்! சாணம் போட்டு மெழுகிய தரை; மேலே கூரை. உள்ளே சாதாரண மர மேஜை; நாற்காலி. படுக்க, சுவர் ஓரமாய் ஈச்சம்பாய். மூலையில் பிரிமனை போட்டு மண்பானை, மேலே ஒரு டம்ளர். தலைக்கு வைக்கும் தாழங்கட்டை, மண்ணெண்ணெயில் எரியும் பழங்கால விளக்கு. அறையின் நாலாபுறமும் அழகான சிறிய ஜன்னல்கள். சுற்றிலும் மரங்களும் பூச்செடிகளுமாய் அமைதியான சூழல்...

துறவி என்றால், லௌகீகமான வாழ்க்கை பற்றி அக்கறைப்படத் தேவையில்லை; சராசரி மனிதர் என்றால், இப்படியொரு வாழ்க்கையை விரும்பியிருக்க மாட்டார்...

பூரணியின் எண்ணங்களைக் கலைத்தது அரவிந்தனின் குரல்.

''இது புரியவே இல்ல பூரணி. ஐந்நூறு ஏக்கர்ல ஸ்கூல், காலேஜ், ஹாஸ்பிடல், குடியிருப்பு, தோட்டம், துரவுன்னு எல்லாத்தையும் உருவாக்கின ஒரு ஆசாமி, இப்படி 'எனக்குச் சம்பந்தமில்ல'ங்கற மாதிரி இருக்கறது ஆச்சர்யமாயில்லை?...''

'ஆச்சர்யமாத்தான் இருக்கு அரவிந்தன்...' என்று மறுமொழி சொல்ல முற்பட்டாள் பூரணி. அதற்குள் பெரியவரின் குரலே எழுந்தது.

''ஆச்சர்யத்துக்கு இதுல எதுவுமே இல்லைம்மா. 'யத் பாவம் தத் பவதி'ன்னு

கேட்டிருக்கியோ...

'நீ எதை நினைக்கிறாயோ அதையே அடைகிறாய்'னு இதுக்கு அர்த்தம். நான் பெரியவாளைப் பார்த்தேன். சமூகத்து மேல அவருக்கு இருக்கிற அக்கறையைப் பார்த்தேன். அதை நிறைவேத்தற யோக்கியதை ஏற்படணும்னா, அவரை மாதிரி பற்றுகள்ல இருந்து விடுபட்டு இருக்கணும்னு புரிஞ்சுது. அதான் இப்படி இருக்கேன். இதையெல்லாம் சாதாரண சமையல்காரனான நான் பண்ணியிருக்க முடியுமா? அதுதான் சாத்தியமா? எல்லாம் அந்த மகானோட அனுக்ரஹம்.''

கண்ணீர் பெருக, பேச்சைத் தொடர்ந்தார் கிருஷ்ணமூர்த்தி.

''என்ன சொல்லிண்டிருந்தேன்? ம்.. மெட்ராஸுக்குக் கிளம்பறதுன்னு முடிவாச்சு. எல்லாத்தையும் வித்து மூவாயிரம் ரூபா தேறித்து. ஊர்ல எல்லார்கிட்டயும் சொல்லியாச்சு.''

''பஞ்சாமிக் குருக்கள், நாராயணப் பிள்ளை, என்னிடம் வேலை பார்த்த சுப்பையன், ராமசாமிக் கோனார்... இன்னும் சில மிராசுதார் நண்பர்கள்... கண்களில் நீர் மல்க பிரியாவிடை கொடுத்தனர். நாகப்பட்டினம் ரயில்வே ஸ்டேஷன் வரை போவதற்கு நாராயணப் பிள்ளை தன்னுடைய வண்டியைக் கட்டிவிட்டார். குழந்தைகள் மூணு பேருக்கும் பட்டணத்துக்குப் போகப் போறோம்னு ஏக சந்தோஷம்.

திருவல்லிக்கேணிக்கு வந்தோம். வந்த மறுநாளே 'ஸ்ரீ சங்கரா கேட்டரிங் சர்வீஸ்'னு வாசலில் போர்டு தொங்க விட்டேன். கொண்டு வந்த பாத்திரங்கள் போறலே. வாடகைக்குக் கொஞ்சம் வாங்கிண்டேன். தொழிலுக்குப் புதுசானதாலே என்ன பண்றது, எவ்வளவு சாமான்கள் வாங்கறதுன்னு ஒண்ணும் புரிபடலே. மொதல்லே காலம்பர, சாயங்காலம் ரெண்டு வேளை டிபன், காபி மட்டும் கொடுக்கலாம்னு ஆரம்பிச்சேன். பக்கத்திலே உள்ள வீடுகள், கடைகள், பள்ளிக்கூடம், ஆபீஸ்கள், சாஸ்திரிகள் நாலு பேருன்னு எல்லார்கிட்டே



## அருள்வாக்கு

**வெ**ள்ளரிப் பழம் மாதிரி விடுபடவேண்டும் என்றால் என்ன? சொல்கிறேன். அந்தப் பழம் முற்றிக் கனிந்த பிற்பாடும் மற்ற பழங்கள் மரத்திலிருந்து விழுகிறாற் போல விழுவதில்லை. என்ன காரணமென்றால் அது பழுப்பது, காய்ப்பது எல்லாமே மரத்தில் இல்லை; கொடியில்தான். வெள்ளரி என்பது கொடியே தவிர, செடியோ மரமோ இல்லை. அந்தக் கொடியையும் பந்தல் போட்டுப் படர விடும் வழக்கம் கிடையாது. முழுக்க பூ ஸ்பரிசம் இருந்தால்தான் அந்தக் கொடியின் வளர்ச்சிக்கு நல்லதென்பதால், நிலத்திலேயேதான் படர விடுவது. அதனால் என்னவாகுமென்றால் ஒரு

யும் சொல்லி, தொழிலுக்கு ஆதரவு திரட்டி னேன்.

முதல் நாள் சின்னதா ஒரு கணபதி ஹோமம் பண்ணி அந்த ஹோம அக்னி யையே எடுத்து அடுப்பைப் பத்தவச்சா சாரதம். ஆரம்பிச்ச நேரமும் ஹோரையும் நல்லபடியா அமைஞ்சுது. அன்னைக்கு ரெண்டு வேளையும் தயார் பண்ணின எல்லாமும் வித்துப்போச்சு. கல்லா தட்டினதிலே எல்லா செலவும் போக ரூ.20/- மிஞ்சித்து. மடத்துக்குன்னு ஒரு உண்டியல் தயார் பண்ணி, அதிலே நாங்க அஞ்சு பேரும் ஆளுக்கு ஒரு ரூபாய் போட்டோம். 'என்ன லாபம் வந்தாலும் நாலிலே ஒரு பங்கு மடத்துக்கு காணிக்கை'ன்னு தீர்மானம் பண்ணிண்டோம்.

**"என்ன லாபம் வந்தாலும் நாலிலே ஒரு பங்கு மடத்துக்கு காணிக்கைன்னு தீர்மானம் பண்ணிண்டோம்"**

சாரதத்தின் கை மணம்! தொழில் அசுர வேகத்தில் விருத்தியாச்சு. ஆபீஸ்கள்லே வேலை பார்க்கற பிரம்மசாரி பசங்க கேட்டுண்டதாலே ரெண்டு வேளையும் சாப்பாடும் போட ஆரம்பிச்சோம்.

ஒரு வருஷத்துக்குள்ளே தொழில் அபரிமிதமா விருத்தியாச்சு. குடியிருந்த வீடு பழங்காலத்துக் கட்டடம். பல எடங்கள்ளே சிதிலமா இருந்தது. வீட்டுச் சொந்தக்காரர் 'பொண் கல்யாணத்துக்குப் பணம் தேவைப்படறது. வீட்டை வித்துடலாம்னு இருக்கேன். முடிஞ்சா நீங்களே வாங்கிக்கோங்கோ. இல்லேன்னா காலி பண்ணிடுங்கோ'ன்னு கெட்டி கட்டினார். வீட்டை வாங்கற அளவுக்கு எங்கிட்ட பணம் சேரலே. தொழிலையும்விட மனசில்லே. இது மாதிரி மெயினான எடத்துலே வேறே இடம் வாடகைக்குக் கிடைக்குமா? - எங்கே போய்த் தேடறதுன்னு புரியலே.''

''அடடா... அப்புறம்?'' என்றாள் பூரணி.

*(தொடரும்)*

வெள்ளரிக்காய் நன்றாகக் கனிவதும் நிலமட்டத்தில்தான்; உசரக்க ஒரு கிளையிலோ, பந்தலிலோ இல்லை. இப்படிப் பழம் முற்றிக் கனிந்தவுடன் காம்பு தானே இற்றுப் போய்விடும். ஆனாலும் பழம் இருந்த இடத்திலே யேதான் இருக்கும். ஏனென்றால் அதுதான் விழ முடியாமல் நில மட்டத்திலேயே இருக்கிறதே! கொடி பாட்டுக்குப் படர்ந்து கொண்டே போகும். அப்போது பழம் எந்த இலைப் பாகத்தோடும் காம்போடும் ஒட்டிக் கொண்டிருந்ததோ அவையும் அந்தண்டை நகர்ந்து போய் விடும். அதாவது காம்புதான் இதை விட்டு விலகிற்றே தவிர இது விலகுவது, விடு படுவது என்ற கார்யத்தைக்கூடப் பண்ணு வதில்லை!

இதே போலத்தான் - ஞானி ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுவதென்பது, அது ஒரு விருக்ஷம் மாதிரியும், இவன் அதில் முற்றிப் பழுத்து விழுவது மாதிரி யும் இல்லை. ஞானத்தில் அவன் பழுத்த பழமான பின்னும் தான் பாட்டுக்கு இருந்தபடியேதான் இருப்பான்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

## மாறிப்போச்சு!

ஹோட்டலில் காபி சாப்பிட்டுக் கொண்டிருந்த ரமேஷின் முதுகில் படீரென அறை விழுந்தது. திரும்பிய ரமேஷின் எதிரில் இருந்தவன் சற்றே பரிச்சயமான முகம் போலத் தோன்றினாலும், சரியாக இனம் காண முடியவில்லை.



அடித்தவன் சொன்னான்: "பார்த்து எவ்வளவு நாளாச்சுடா சுரேஷ்! ஆளே அடியோடு மாறிட்டே! முந்தி ஒல்லியா இருந்தே! தலையில் ரொம்ப முடி இருந்தது. இப்போ, ஃஸா முன் வழுக்கை. குண்டாயிட்டே! புதுசா கண்ணாடி வேறே! உம்..."

"நீங்க நினைக்கிற மாதிரி நான் சுரேஷ் இல்லை. என் பெயர் ரமேஷ்"

"அடப்பாவி! பேரைக் கூட மாத்தி வைச்சுக் கிட்டியா?"

"இன்னும் ஒரு அடி எடுத்து வைத்தாலும் ஆபத்து!" என்றது ஒரு குரல். அசையாமல் நின்றான் அவன். பெரிய பாறை ஒன்று உருண்டு வந்து அவன் முன்னால் சற்று தொலைவில் விழுந்தது.

ஆச்சர்யத்துடன் கொஞ்ச தூரம் நடந்தான்.

"நில் அங்கேயே!" மீண்டும் வந்தது குரல்.

அடுத்த கணம் கார் ஒன்று உரசியபடி தாண்டிச் சென்றது.

வியப்பில் ஆழ்ந்த அவன் கேட்டான், "யார் நீ?"

"நான் உன்னைப் பாதுகாக்க வந்த தேவதை!" என்றது குரல்.

"அப்படியானால், எனக்குக் கல்யாணம் ஆகும்போது நீ எங்கே இருந்தாய்?"



## தாமத தேவதை!

# ஞானம் வந்தது!

தன்னலமற்ற சேவை மனப்பான்மையும், நன்னடத்தையும் கொண்ட அவருக்குப் பரிசளிக்க விரும்பிய கடவுள், ஒரு நாள் அவர் முன் தோன்றி, ''அளவற்ற செல்வமா? அளவற்ற ஞானமா? இரண்டில் எது வேண்டும் சொல். தருகிறேன்''என்றார்.

கணமும் யோசிக்காமல் ''அளவற்ற ஞானம் போதும்'' என்றார்.

''அப்படியே ஆகட்டும்'' என்று சொல்லி கடவுள் மறைந்தார்.

தன் தோழர்களிடம் நடந்ததைப் பகிர்ந்து கொண்ட அவர் சொன்னார்

''நான் கடவுளிடம் அளவற்ற செல்வம் கேட்டிருக்க வேண்டும்.''

''என்ன இப்போது சொல்கிறீர்கள்? கடவுளிடம் முதலிலேயே கேட்டிருக்கலாமே!''

''அப்போது எனக்கு அவ்வளவு ஞானம் இல்லை'' என்றார் அவர்.



# எஸ்.எம்.எஸ். கதைகள்

''ஆண்களைவிட பெண்கள்தான் அதிகமாகப் பேசுகிறார்கள். சமீபத்தில் அமெரிக்காவில் இது பற்றி ஆய்வு செய்ததில், ஆண்கள் சராசரியாக ஒரு நாளில் 10,000 வார்த்தைகள் பேசுகிறார்கள் என்றால், பெண்கள் சராசரியாக 20,000 வார்த்தைகள் பேசுவதாகக் கணக்கிட்டிருக்கிறார்கள் தெரியுமா?'' என்றான் ஒரு கணவன் தன் மனைவியிடம்.

மனைவி ஒரு கணம் யோசித்த பின் சொன்னாள் - ''இருக்கலாம். ஆண்களைவிடப் பெண்கள் இரு மடங்கு பேசக் காரணம், பெண்கள், ஆண்களுக்கு எல்லாவற்றையுமே ஒரு முறைக்கு இருமுறை எடுத்துச் சொல்ல வேண்டி இருப்பதே!''

புரியாமல் விழித்த கணவன், மனைவியிடம் கேட்டான் ''இப்போது நீ என்ன சொன்னாய்?''



# ட்யூப் லைட்!

கலக்க வருதுப்பா

# கல்கி

கெட் ரெடி!
கெட் ரெடி!
கெட் ரெடி!

உங்க மாவட்டங்கள்ல
'சூப்பர்' எதுங்க? 'வேஸ்ட்' எதுங்க?

- நீங்க ஜாலியா ரவுண்டடிக்கிற டூரிஸ்ட் ஸ்பாட் எது?
- பார்த்ததும் பரவசமா கும்பிடு போடற கோயில் எங்கெல்லாம் இருக்கு?
- அசத்தலா போட்டுகிட்டு அதிரடி பண்ண சேலை, ஜீன்ஸ் சுத்துவட்டாரத்துல எங்கேயாச்சும் கிடைக்குமா?
- கல்லூரிக் கண்மணிகளின் சாதனை எதுவும் தெரியுமா..?
- உங்க மாவட்டங்களோட தலைபோற பிரச்னை எதுங்க? எப்படித் தீர்க்கலாம்?
- மிஸ்டர்/மிஸ் மாவட்டம் யாருங்க! என்ன காரணமுங்க?
- கலக்கலா கதை எழுதுவீங்களா? அசத்தலா கவிதை வருமா?
- லொள்ளு பண்ற 'ஜோக்ஸ்' கைவசம் இருக்கா?

-'ஆமா'ன்னா உடனே 'கல்கி'க்குத் தட்டி விடுங்க!



# நீங்க ச்சும்மா கோடு போடுங்க...
# நாங்க உடனே ரோடு போடறோம்!

ஆமாம்! உங்க திருவண்ணாமலை, வேலூர் மாவட்டங்களுக்கு 'கல்கி' குழு, நேரில் வந்து உங்கள் பிரச்னை / யோசனையை ஆராய்ந்து, உங்கள் வாய்ஸுக்கு 'கல்கி' இதழ் மூலம் மைக் கொடுக்கும்!

ஆனா சில கண்டிஷன்ஸ்...

- கீழே உள்ள கூப்பனைக் கத்தரித்து ஒட்டி அனுப்பப்படும் கடிதம், படைப்பு மட்டுமே, பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும்...
- ஒரு கடிதத்தில் 5 செய்திகள் / படைப்புகள் மட்டுமே இருக்கலாம்.
- ஒருவரே எத்தனை கடிதம்; படைப்புகள் வேண்டுமானாலும் அனுப்பலாம் (தனித்தனி கூப்பனுடன்).
- பிரசுரமாகும் கடிதங்கள், யோசனைகள், படைப்புகளுக்குச் சன்மானங்கள் உண்டு.
- வாசகர்கள் தேர்வு செய்யும் மிகச் சிறந்த கடிதம் அல்லது யோசனை அல்லது படைப்புகளுக்குச் சிறப்புப் பரிசும் உண்டு...
- திருவண்ணாமாலை, வேலூர் வட்டாரத்தின்...

பிரச்னைகளுக்கு - ☑ பெட்டிஷன் பாக்ஸ்

ஆன்மிக, வியாபார, சுற்றுலா தலங்களின் சிறப்புக்கு - ☑ நியூஸ் ஏந்தி பவன்

சிறுகதைகள், கவிதைகளுக்கு - ☑ வேடந்தாங்கல்

நகைச்சுவைக்கு - ☑ ஜோக் ஃபால்ஸ்

என்றவாறு கூப்பனில் ☑ செய்து கவரின் மேல் ஒட்டி, உங்களின் முழு முகவரி, தொலைபேசி தொடர்பு எண் ஆகியவற்றைக் கட்டாயம் எழுதி அனுப்பவும்.

**கடிதங்கள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி : 20.8.09**

**கலக்க வருதுப்பா கல்கி**
**திருவண்ணாமலை, வேலூர்**

☐ நியூஸ் ஏந்தி பவன் ☐ பெட்டிஷன் பாக்ஸ்

☐ வேடந்தாங்கல் ☐ ஜோக் ஃபால்ஸ்



47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32




# கு.ஞானசம்பந்தன்



''சும்மா இருப்பதுதானே சுகம்... சுறுசுறுப்பாய் இருப்பது எப்படிச் சுகமாகும்?''

இளைஞர்களுக்கான கூட்டமைப்பில் நான் பேசி முடித்தவுடன் கேள்வி-பதில் நிகழ்ச்சியில், முதல் கேள்வியே இப்படித்தான் வந்தது.

நான் மைக் அருகே சென்று கேள்வி கேட்டவரைப் பார்த்து, ''சும்மா இருப்பதே சுகம் என்று யார் சொன்னார்கள் தெரியுமா?'' என்று அன்போடு கேட்டேன்.

''ஒரு கூட்டத்தில், தாயுமானவர் பாடல் என்று சொற்பொழிவாளர் சொன்னதாக நினைவு...''

''சும்மா என்ற சொல்லை எத்தனை வகையில் பயன்படுத்துகிறோம் தெரியுமா? 'சும்மா இருடா'ன்னா பேசாமல் இரு. 'சும்மா சொன்னேன்' என்றால் பொய் சொன்னேன்.

'சும்மா குடுத்தாங்க' என்றால் ஓசியாகக் கொடுத்தார்கள் என்று பொருள். இத்தனை பொருள் இருக்கிற சும்மாவை நாம் 'சும்மா'வே பயன்படுத்துகின்றோம். மனத்தை அடக்கினால் ஞானிகள் போலச் சுகமாய் இருக்கலாம் என்பதைச் சொல்லவே சும்மா இருப்பதே சுகம் என்றார் தாயுமானவர். நான் சொல்ல வந்த பொருள் வேலையற்றுச் 'சும்மா' இருப்பதில் சுகம் இல்லை. சுறுசுறுப்பாக இருந்து பாருங்கள்'' என்று கூறிவிட்டு,

''அதுமட்டுமில்லை... நம்முடைய கவிஞர்கள் பலரும் இந்தச் 'சும்மா' என்ற வார்த்தையை அருமையாகப் பயன்படுத்தியிருக்கிறார்கள்.

'சும்மாயிரு சொல்லற என்றலுமே
அம்மா பொருளொன்றும்
அறிந்திலமே'

எனக் கந்தரனுபூதியில் அருணகிரிநாதரும்,

'சும்மா கிடந்த நிலத்தைக் கொத்திச் சோம்பலில்லாம ஏர் நடத்தி' என்று பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரமும் பாடியிருக்கிறார்கள்'' என்றேன்.

''சும்மா, சும்மா, சும்மா அஞ்சுமணிக்குச் சும்மா சும்மா'' என்று கவிஞர் சினேகனின் திரைப்படப் பாடலை ஒரு பையன் பாடினான்.

''காலையில் படுக்கையை விட்டு எழும்போதே சுறுசுறுப்போடு எழுந்து வேலைகளைச் செய்யப் போவதாக உங்

யுமா? இப்போது கூட ஜாக்கி சான் படத்தைப் பார்த்து விட்டுப் பலபேர் தாவிக் குதித்து அதே 'டெம்போ' வோடு வீடு செல்வதைப் பார்த்திருக்கிறேன்.''

''நம்ம தமிழ்ப் படங்கள் அப்படி இல்லை ஸார். ஏழைக் கதாநாயகன், பார்வை இல்லாத அப்பா, நோயுற்ற அம்மா, காணாமப் போற தங்கச்சி, 25 வருஷத்துக்கு முந்திக் குடும்பத்தைச் சீரழிச்ச வில்லன் இத்தனை பேருக்கு



# அஞ்சு மணிக்கு சும்மா...சும்மா..!

களுக்கு நீங்களே சொல்லிக் கொள்ளுங் கள். அதே ஆர்வத்தோடு வேலைகளைத் தொடருங்கள். பல் துலக்க அரைமணி, காப்பி குடிக்க அரைமணி, பேப்பர் சினிமா செய்தியில் ப்ரியாமணியைப் பார்க்க ஒரு மணி என ஒதுக்காதீர்கள். விரைவு, வேகம் இவை எண்ணமாக இருக்கட்டும். 'ஓடு', 'உற்சாகமாயிரு', 'வெற்றிபெறு' என்று சொல்லிக் கொள்ளுங்கள்'' என நான் பேசப்பேச அனைவரின் முகத்திலும் உற்சாக வெளிச்சம் பரவியது.

''ஆங்கிலப் படக் கதாநாயகர்களை, குறிப்பாக ஜேம்ஸ்பாண்ட் 007 படக் கதா நாயகனை நமக்கு அறிமுகம் செய்யும் போதே, ஆகாய விமானத்திலிருந்து குதித்தோ, நீர்வீழ்ச்சிகளில் தாவியோ அவன் வருகிறபோது, தியேட்டரில் விசிலும் கைதட்டலும் பறக்கும் தெரி

நடுவில் காதலியோடு பாட்டுப் பாடி, காதலிக்க முடிக்கிறதுக்குள்ள நமக்கு வயசாயிடும்'' என்று ஒரு இளைஞன் சோகத்தோடு சொல்ல, அனைவரும் ஆரவாரமாக அதை வரவேற்றார்கள்.

''நீங்கள் சொல்வது உண்மைதான். இருந்தாலும் மக்கள் திலகம் எம்.ஜி.ஆர். படங்களில் அவர் திரையில் தோன்றுகிற போதே உற்சாகம் பீறிட்டடிப்பதை நான் இன்றும் பார்க்கிறேன்.

'உலகம் பிறந்தது எனக்காக ஓடும் நதிகளும் எனக்காக

மலர்கள் மலர்வது எனக்காக அன்னை மடியை விரித்தாள் எனக்காக'

எனும் கவியரசு கண்ணதாசனின் பாடலை இப்போது கேட்டாலும் நமக்குள் உற்சாகம் உண்டாகும்.

''ஓய்வு என்பதே மாற்று வேலைதான்.

**ஓய்வு என்பதே மாற்று வேலைதான். எழுதிக்கொண்டே இருப்பவர்கள் சற்று நேரம் பூஞ்செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றலாம்.**

எழுதிக் கொண்டே இருப்பவர்கள் சற்று நேரம் பூஞ்செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றலாம். கணினிக்கு முன்னே இருந்து கண் பூத்துக் கண்ணாடி போட்டிருப்பவர்கள் சற்று நேரம் நம் வீட்டுக் குழந்தைகளுக்கு 'ஹோம்வொர்க்'குக்கு உதவி செய்யலாம், மாற்று வேலையே மனத்து ஓய்வு. பயிர் சுழற்சி முறையே நிலத்துக்குச் செழுமை'' என்றேன்.

''பயிர் சுழற்சி முறை என்றால் என்ன?'' என்று வயலும் வாழ்வும் நிகழ்ச்சியில் கேட்பதுபோல் ஒரு இளைஞர் கேட்டார். அவர் கணிப்பொறியாளர்.

''நெல் பயிரிடும் நிலத்தில் அடுத்து வாழையோ, கரும்போ, வெற்றிலையோ பயிரிடுதல், இதனால் மண்ணிலிருந்து ஒரே மாதிரியான சத்து உறிஞ்சப்படாமல், மண் வளம் பெற வசதியாக இருக்கும்'' என்றேன்.

''ரொம்ப அசதியாக இருக்குது ஸார்'' என்றான் ஒரு மாணவன் உடனே!

''சரி, தோல்வியைக் கூட வெற்றியாக்குகிற வித்தையைச் சொல்றேன் கேளுங்க. பல நாளா வேலை கிடைக்காத ஒருவன் சர்க்கஸ் கம்பெனி ஒன்றில் வேலை கேட்டுப் போனானாம். முதலாளி 'நீ என்ன படிச்சிருக்க?' எனக் கேட்டாராம். அவனும் 'பி.ஏ' என்று பெருமையாகச் சொன்னானாம். 'அப்படியா? இங்க உன் படிப்புக்குரிய வேலை இல்லை. ஆனா, நேத்து எங்க கம்பெனியில கருங்குரங்கு ஒன்று ஹார்ட் அட்டாக்ல செத்துப் போச்சு. நீ குரங்கு மாதிரி வேஷம் போடறியா? சம்பளம் ஆயிரம் ரூபாய்' என்றார். சந்தோஷமாகக் குரங்கு வேடம் போட்டு அவன் கூட்டத்துக்குள் ஓடித் தாவு, தாவுன்னு தாவிச் சிங்கக் கூண்டுல விழுந்துட்டானாம்! சிங்கம் இவனை நோக்கி வந்தவுடன், 'ஐயோ, ஆயிரம் ரூபாய்க்காக இப்படிச் சிங்க வாயில சாகப் போறோமே' என்று அலறினான். சிங்கமோ, 'கவலைப் படாதே! நான் உன்னை ஒண்ணும் செய்ய மாட்டேன். நீ பி.ஏ. உனக்கு குரங்கு வேஷம். நான் எம்.ஏ. சிங்க வேஷம். இங்க நரியா, கரடியா திரியறவனெல்லாம் எட்டாங்கிளாஸ் ஃபெயிலு. அதனால நீ எந்தக் கூண்டுக்குள்ள போனாலும் சாக மாட்டே' என்று சொன்னதாம்.

இந்தக் கதை வேடிக்கைக்காக அந்தக் காலத்தில் சொல்லப்பட்டது. இன்றோ படித்து முடிப்பதற்குள்ளே கேம்பஸ் இன்டர்வியூவில் உங்களுக்கு வேலை கிடைக்கிறதே'' என்று நான் ஆறுதலாகச் சொல்ல, அவர்கள் சிரித்த சிரிப்பில் சுறுசுறுப்பே சுகமாய் வெளிப்பட்டது.




(வெற்றி தொடரும்)

# கிரேஸி ட்ரீட்!

## 125வது வாரக் கொண்டாட்டம்

வாசகர்களுக்கு ஒரு
மெகா சர்ப்ரைஸ் ட்ரீட் கிரேஸியோடு!

கிரேஸியைக் கேளுங்கள் 125-வது வார கொண்டாட்டத்தில் பங்குபெறுங்கள்.

கீழே உள்ள கூப்பனில் கிரேஸிக்கான கேள்வியை எழுதி அனுப்புங்கள்.

கிரேஸி தேர்ந்தெடுக்கும் கேள்வியை எழுதிய வாசகர்களுக்கு அவருடன் சர்ப்ரைஸ் ட்ரீட் காத்திருக்கு.

ஒருவரே எத்தனை கூப்பன்கள் வேண்டுமானாலும் அனுப்பலாம்; ஆனா ஒரு கூப்பனில் ஒரு கேள்வி மட்டுமே இருக்கணும்.

ஜெராக்ஸ் நாட் அலௌவ்ட்; ஒரிஜினல் கூப்பனை மட்டுமே அனுப்புங்க.

இதுவே கடைசி கூப்பன்.

30.8.09 இதழில் கொண்டாட்டம் காத்திருக்கிறது.

கடைசி தேதி: 10.8.09. ஆசிரியர் தீர்ப்பே இறுதி

**கிரேஸி ட்ரீட் - 3**

கிரேஸியைக் கேளுங்கள் இங்கே : ..................

..................................................

பெயர் : ..........................................

முகவரி: ..........................................

..................................................

..................................................

தொலைபேசி எண் : ..................................

கல்கியில் விரும்பிப் படிப்பது: ..................

..................................................

*கிரேஸி ரெடி...நீங்க ரெடியா..?*




# வாய்ஸ் த 'நாய்'ஸ்

''எனக்கு ரோபோ ஷங்கர்னு பேர் வந்ததே மேடையில நிறைய ரோபோ டான்ஸ் பண்றதாலதான். உடம்பு முழுக்க, அலுமினிய பெயிண்டிங் செஞ்சுக்கிட்டு ரோபோ டான்ஸ் ஆடுவேன். ரொம்பக் கஷ்டமான டான்ஸ் ஸார் அது. ரஜினி சார் நடிக்கிற 'ரோபோ' (எந்திரன்) படத்துக்குக் கூட என்னைப் பார்த்துத்தான் பேர் வெச்சாங்க'' என்று ரோபோ ஷங்கர் பில்டப் செய்து கொண்டிருந்தபோதே, ''இவரை இப்படியே பேச விட்டா ரஜினி ஸாருக்குப் பேர் வெச்சதே நான்தான்''னு சொல்வாரு என்று மடக்கினார் அரவிந்த்.

''மிமிக்ரி செய்றோம்ங்கற பேர்ல ஊரையே கண்ணைக் கட்டிக் காட்டுல விடற உங்களுக்கு 'இப்பவே கண்ணைக் கட்டுதே'ன்னு சொல்ல வைச்ச அனுபவங்கள் இருக்குமே?''

கேள்வியை முடிப்பதற்குள் பாய்ந்து வந்து பதில் சொன்னார் ரோபோ ஷங்கர்.

''ஸார் என்னோட மேரேஜ் லவ் மேரேஜ். காலைல எந்திரிச்சு வாசல் தெளிச்சு, கோலம் போட்டு பொண்டாட்டி, குழந்தைக்கு காப்பி போட்டுக் கொடுக்கற வரைக்கும் நான்தான் செய்வேன். வொய்ஃப் பார்த்து, நான் செய்யறது இருக்கே, அதுல இருக்கற சுகமே தனிதான்'' என்று உருகிய ரோபோ ஷங்கர், ''நானும், என் வொய்ஃபும் ஒரு தடவை சென்னையிலிருந்து மதுரைக்கு பஸ்ல போனோம். பஸ் திருச்சி பக்கத்துல பத்து நிமிஷம் நின்னது. அந்தச் சமயம் வெளியே படுத்திருந்த நாய் ஒண்ணு

**''புலியைக் கல்யாணம் பண்ணிக்கிட்டது பூனையாகுமான்னு என்னை நானே தேத்திக்கிட்டேன்.''**

குரைச்சது.

நான் என் சம்சாரத்தைக் கலாய்க்கறதா நினைச்சு, 'பிரியா உன்னைக் கூப்பிடறாங்க பாரு'ன்னேன். அதுக்கு அவ, 'நல்லா கேளுங்க. அது உங்க வாய்ஸ்தான்'னு க்ளீன் போல்ட் பண்ணிட்டா. 'இதுக்கு மேலே ஒண்ணும் பேச முடியாம 'கப்சிப்' ஆயிட் டேன். நாம டெய்லி டீ.வி.யில ரொம்ப பேரைக் கலாய்க்கறோம். ஆனால் நம்ம சம்சாரம் நம்மை இப்படிக் கலாய்க்கறா ளேன்னு யோசிச்சேன். சரி 'புலி'யைக் கல்யாணம் பண்ணிக்கிட்டது பூனையாகு மான்னு என்னை நானே தேத்திக்கிட் டேன்'' என்றார்.

நமது பார்வை அரவிந்த் பக்கம் திரும்பி யது. ''ரோபோ மாதிரி காதல் அனுபவங்கள் எனக்குக் கிடையாது. மிகப் பெரிய லவ் எக்ஸ்பிரியன்ஸுக்கு நான் தயாராகிட்டிருக் கேன்'' என்று ரொமான்டிக் பிட்டைப் போட்டார் அரவிந்த்.

''இவங்க இப்படித்தான்னு புரோக்ராம் பண்றீங்களே, நீங்க ரெண்டு பேரும் எப்படி?'' என்றோம்.

''நாங்க ரெண்டு பேருமே மதுரை. கிட்டத்தட்ட இருபது வருஷமா ஃபிரெண்ட்ஸ். பன்னிரண்டு வருஷமா கலைநிகழ்ச்சிகள் பண்ணிக்கிட்டு வர் றோம். மதுரை சரஸ்வதி நாராயணன் கல் லூரியில் சேர்ந்து படிச்சோம். மதுரையில சாதாரண மேடை நிகழ்ச்சிகளில் ஆரம்பிச்ச எங்க கலை வாழ்க்கை, வெளிநாட்டு நிகழ்ச்சிகள்னு தொடர்ந்து சேனல்ஸ் வரை வந்திருக்கு.

ஆரம்பக் காலத்துல, ஞானசம்பந்தன் தலைமையில் மதுரையில் நடந்த ஹ்யூமர் கிளப் நிகழ்ச்சிகளில் பங்கேற்றோம். இந்த நிகழ்ச்சிகள்தான் எங்கள் இருவரின் வெற் றிக்கு அடிப்படை. காமெடி இரட்டை யர்களான நாங்க நட்புக்கும் சிறந்த உதாரணமா இருப்போம்'' என்கிறார்கள் இருவரும் கோரஸாக.

- ராகவ்குமார்



முப்பது வருடங்களாக டெல்லிவாசியாக இருந்த ராம்விலாஸ் பாஸ்வான், தேர்தல் தோல்வி காரணமாக அரசு பங்களாவைக் காலி செய்ய வேண்டிய கட்டாயம். இதனால் பாஸ்வானின் பஞ்சாபி மனைவி ரொம்பவே அப்செட். வருகிற உறவினர்கள் மற்றும் கட்சிக்காரர்களிடம், "ஐயோ! இத்தனை நாள் வசித்த வீட்டைக் காலி செய்யணுமே!" என்று புலம்பித் தள்ளுகிறார். சினிமாவில் புதுமுகமாக அறிமுகமாகியுள்ள பாஸ்வானின் மகனுக்கும் டெல்லியை விட்டு, பீகாருக்குச் செல்ல மனசில்லை. எப்படியும் லல்லு தயவில் ராஜ்யசபா எம்.பி. ஆகிவிடலாம் என்று கணக்கு போட்டுக் கொண்டு, நம்பிக்கையோடு காத்திருக்கிறார் பாஸ்வான்.

***(வீட்ல போரடிக்குது. என்னை ராஜ்ய சபா எம்.பி. ஆக்கிடுங்கன்னு ராப்ரி, லாலுவைக் கேட்காம இருக்கணும்)***



* கொல்கத்தா எக்ஸ்பிரஸ்



* நம்பிக்கைக் கணக்கு

லோக் சபாவில் ஸ்டார் எம்.பி. யார் தெரியுமா? ராகுல்தான். பாராளுமன்றம் நடக்கிறபோது, ராகுலுக்குப் பக்கத்தில் வந்து கொஞ்ச நேரம் உட்கார்ந்து, அவருடன் பேசிவிட்டுப் போவது காங்கிரஸ் எம்.பி.க்களுக்கு இப்போது ஃபேஷனாகிவிட்டது. சமீபத்தில் ஒருநாள் ஒன்றரை மணி நேரத்தில் ஒன்பது காங்கிரஸ் எம்.பி.க்கள் மாறி மாறி அவர் பக்கத்தில் உட்கார்ந்து பேசினார்கள்.

***(ஆறு மாசத்துல உடல்நிலையைக் காரணம் காட்டி பிரதமர் ஓய்வு பெறப் போவதாக வருகிற வதந்திக்கும் இதுக்கும் தொடர்பு இருக்குமா?)***



* வெறுப்புப் பிணக்கு

"மம்தா இந்தியாவின் ரயில்வே அமைச்சரா? இல்லை, மேற்கு வங்காளத்தின் ரயில்வே அமைச்சரா?" என்று ரயில்வே அமைச்சகத்தில் கிண்டலாகக் கேட்கிறார்கள். காரணம், மம்தா பானர்ஜி ரயில்வே அமைச்சர் பதவி ஏற்றுக்கொண்ட பிறகு, ஒரு மாதத்தில் 21 நாட்கள் கொல்கத்தாவில்தான் இருந்தார். ரயில்வே பட்ஜெட் தயாரிப்பு உள்ளிட்ட பல முக்கிய ஃபைல்களுடன் அமைச்சக உயர் அதிகாரிகள் டெல்லிக்கும், கொல்கத்தாவுக்கும் இடையில் ரயிலில் இல்லை விமானத்தில் பறந்தார்கள்.

***(எல்லாம் சட்டசபை தேர்தல் 2011 பண்ற வேலை. அம்மணிக்கு மந்திரி பதவியும் வேணும்; கம்யூனிஸ்ட்களையும் ஒரு கை பார்க்கணும்!)***

தேசிய அடையாள அட்டை வழங்கும் திட்டத்துக்குத்

தலைவராக நியமிக்கப்பட்டுள்ள முன்னாள் இன்ஃபோசிஸ்காரரான நந்தன் நிலேகனி, ''இந்தத் திட்டம் சந்திக்கவிருக்கும் மிகப் பெரிய சவால், பல்வேறு அரசுத் துறைகளையும் ஒருங்கிணைத்து, திட்டத்தைச் செயல்படுத்துவதுதான்'' என்று சொல்லி இருக்கிறார். பதினெட்டு வயதானவுடன் இந்த அட்டையை வாக்காளர் அடையாள அட்டையாகவும் பயன்படுத்தலாமாம்.

*(ஏங்க! இதை வெச்சு கள்ள வோட்டு போட முடியுமுங்களா?)*

**ஒ**ரே மாதத்தில் தலித் மக்கள் மீது வன்முறை, கற்பழிப்பு, கொலை என 29 சம்பவங்கள். மாநிலத்தில் தினமும் பதினான்கு மணி நேர பவர்கட். ஆனால் மாயாவதியோ தன் சிலைகளையும், பி.எஸ்.பி. கட்சியின் சின்னமான யானை சிலைகளையும் நிறுவுவதற்கு கோடிக் கணக்கில் மக்கள் பணத்தை வாரி விட்டுக் கொண்டு இருக்கிறார். மக்கள் மாயாவதி மீது வெறுப்பில் இருக்கிறார்கள். இதுதான் காங்கிரஸ் கட்சி தலைமை அலுவலகத்தில் ஹாட் டாப்பிக்காகப் பேசப்படுகிறது.

*(முள்ளை முள்ளால் எடுக்கிறேன் என்று சொல்லிக்கொண்டு மாயாவதி சிலைகளுக்கு எதிரே ராகுல், சோனியா சிலைகளை வெச்சுடாதீங்கப்பா!)*

- பரத்ராம்



# ஸ்டார் எம்.பி.



பள்ளிக்கூடம், பெஞ்சு, நாற்காலி, மேஜை, மைக்கூடு எல்லாம் அவரைச் சுற்றிச் சுழலத் தொடங்கின.



# ஸ்ரீமதி சகுந்தலாதேவி

**க**ணையாழியில் பெண்கள் பள்ளிக்கூடம் ஒன்று இருந்தது. அதன் உபாத்தியாயரின் பெயர் கனகசபை வாத்தியார். கொஞ்சம் பழைய காலத்து மனிதர். ஐயோ! சாமி! அன்று அவர் அடைந்த காப்ராவைப்போல் அதற்கு முன் அவருடைய வாழ்நாளில் என்றும் அடைந்ததில்லை.

''ஸார்! ஸார்! யாரோ வாரா, ஸார்!'' என்று ஒரு பெண் கூவினாள். உடனே எல்லாப் பெண்களும் ஜன்னலண்டை குவிந்து வேடிக்கை பார்க்கலானார்கள். வாத்தியாரும் அந்தப் பக்கம் நோக்கினார். உடனே பள்ளிக்கூடம், பெஞ்சு, நாற்காலி, மேஜை, மைக்கூடு எல்லாம் அவரைச் சுற்றிச் சுழலத் தொடங்கின. சட்டென்று 'பிளாக்போர்டு' துடைக்கும் குட்டையை எடுத்துத் தலைப்பாகையாகச் சுற்றிக் கொண்டார். மேஜை மீதிருந்த தலைப்பாகையை உதறி அங்கவஸ்திரமாகப் போட்டுக் கொண்டார். பிறகு, நாற்காலி முதுகின்மேல் கிடந்த மேல் வேஷ்டியை எடுத்து, அதை என்ன செய்வதென்று தெரியாமல் விழித்தார்.

# வண்ணத் தூரிகை

இதற்குள், சமீபத்தில் காலடிச் சத்தம் கேட்கவே அதை மேஜை அறையில் செருகிவிட்டுப் பெண்களைப் பார்த்து, ''சனியன்களே! உட்காருங்கள். அவரவர் இடங்களில் உட்காருங்கள்!'' என்று பாம்பு சீறுவது போன்ற குரலில் அதட்டினார்.

அடுத்த நிமிஷத்தில் ஸ்ரீமதி சகுந்தலா தேவியும், அவளுடைய தகப்பனாரும் பள்ளிக்கூட அறைக்குள் வந்தார்கள். ''வாத்தியாரே! இவள் என்னுடைய பெண். கல்கத்தாவிலிருந்து வந்திருக்கிறாள். பள்ளிக்கூடத்தைப் பார்க்கவேண்டுமென்றாள். அழைத்து வந்திருக்கிறேன்'' என்று ரங்கநாதம் கூறினார். வாத்தியாருக்கு இந்த விஷயம் விளங்கச் சற்று நேரம் பிடித்தது. அவர் பள்ளிக்கூட இன்ஸ்பெக்ட்ரெஸ் அம்மாள்தான் திடீர் சோதனைக்கு வந்துவிட்டாள் என்று எண்ணியே அவ்வளவு குழப்பத்துக்குள்ளாகியிருந்தார். இந்தக் காலத்தில்தான் சின்னச் சின்னப் பெண்களுக்கெல்லாம் இன்ஸ்பெக்ட்ரஸ் உத்தியோகம் கொடுத்து, தலை நரைத்த கிழவர்களை மிரட்டுவதற்கென்று அனுப்பி விடுகிறார்களே!

- **'கணையாழியின் கனவு'**
**கதையிலிருந்து...**



**அமரர் கல்கி**

முருகேசனை குண்டு விளையாட்டில் யாரும் ஜெயிக்க முடியாது. ஒரு நாளைக்கு இரண்டு, மூன்று ரூபாய் சம்பாதித்து விடுவான். சில நாட்களில் ஐந்து, பத்து... நான் முருகேசனுக்குப் பக்கத்தில்தான் உட்கார்ந்திருக்கிறேன். அவன் பள்ளிக்கூடத்தில் இருக்கும் நேரம் குறைவு. பள்ளிக்கூடத்தை ஒட்டின மாதிரி முருகேசன் வீடு. அவன் வீட்டிலும் இருக்கமாட்டான். அவனுடைய அம்மா யாருடனாவது சண்டை போட்டுக் கொண்டே இருப்பார்கள். எங்களுக்குச் சத்தம் கேட்டுக்கொண்டே இருக்கும்.

முருகேசன் வகுப்பிலிருந்து அடிக்கடி காணாமல் போய்விடுவான். சில நாட்கள் வகுப்புக்கே வரமாட்டான். நடராஜ் வாத்தியார் அடிக்கடி சிகரெட் பிடிக்க வெளியே போய்விடுவார். அந்த நேரத்தில் முருகேசன் நழுவிவிடுவான்.

முருகேசன் நடக்கும்போது கோலிக்குண்டுகள் சலசலக்கும். அவன் குறி வைத்து அடிக்கிற அடியில் குண்டுகள் உடைந்து சிதறித் தெறிக்கும். தினமும் மூலைக்கடையில் கோலிக்குண்டுகள் வாங்குவான். அவனுக்குக் குண்டு விளையாட்டின் நுணுக்கங்கள் எல்லாமே அத்துப்படி. பெரிய ஆட்களெல்லாம் அவனிடம் தோற்றுவிடுவார்கள். முருகேசனை நம்பி குண்டு



விளையாட்டில் எவ்வளவு காசு வேண்டு மானாலும் பந்தயம் கட்டலாம்.

நடராஜ் வாத்தியார் எப்போதாவது பாடம் நடத்துவார். பாடம் நடத்துவார் என்றால் புத்தகத்தை வேகமாகப் படித்து விடுவார். ''இதெல்லாம் எழுதுங்க பார்க்க லாம்... சத்தம் வரக்கூடாது... என்ன?'' என்று சொல்லிவிட்டு சிகரெட் பிடிக்க வெளியே போய்விடுவார்.

நடராஜ் வாத்தியாருக்கு டீ வாங்க, சிகரெட் வாங்கி வர முருகேசன்தான் போவான். அவனை விட்டால் காளீஸ் வரன்.

நான்காம் வகுப்பு வந்த புதிதில் முருகேசன் நன்றாகத்தான் இருந்தான். சாயங்காலம் நேரம், லீவு நாட்களில் மட்டுமே குண்டு விளையாடப் போவான்.

ந.கனகராஜன்

இரண்டு மூன்று தடவை வகுப்புக்கு வராமல் டிமிக்கி கொடுத்துவிட்டு விளை யாடப் போய்விட்டான். ஒரு நாள் நடராஜ் வாத்தியார் அவனை அடி பின்னி எடுத்துக் கொண்டிருந்தார்.

''சொல்றா... நேத்து எங்கடா போனே? சினிமாவுக்கா?''

''ஸார்... நேத்து முருகேசன் குண்டு விளையாட்டுல அஞ்சு ரூபா ஜெயிச்சான் ஸார்'' என்று காளீஸ்வரன் எழுந்து கத்தி னான்.

அடிப்பதை நிறுத்தினார்.

''எவ்வளவுடா ஜெயிச்சே?''

முருகேசன், பதில் சொல்லாமல் அவ ரையே பார்த்துக்கொண்டிருந்தான்.

''அஞ்சு ரூபாயா?''

# கோலிக் குண்டின் மரணம்



அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் இரண்டாம் பரிசு ரூ.7,500 பெறும் கதை

''ஆமாம்'' தலை யசைத்தான்.

''போடா... போயி செல்லமுத்தான் கடையில் எனக்கு ஸ்ட்ராங்கா டீ வாங்கிட்டு வா...''

முருகேசன் போனான்.

தினமும் வாத்தியாருக்கு முருகேசன் தன் செலவில் டீ வாங்கிக் கொடுத்தான்.

அப்புறம் இரண்டாம் வகுப்பில் காணாமல் போய்விடுவான். வாத்தி யார் அவனைக் கண்டு கொள்ளமாட்டார்.

''என்னடா முருகேசா...

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி (2009) பிரசுரத்துக்குத் தேர்வான கதைகள்

1. அப்பத்தாவின் கொட்டடி சேலை - தீபம் முத்து
2. காற்று - ரோஷினி
3. ஒரு குறும்படமும் பின்குறிப்பும் - மாதங்கி
4. சிக்காகோ மாம்பழம் - ஈஸ்வர்
5. சீதைவனம் - அகல்யா
6. கனா காணும் காலங்கள் - ஜி.ஆர்.சுரேந்தர்நாத்
7. நலன்புரி மையங்கள் - வி.ர.வசந்தன்
8. கல்லறை மேடு - சுரேஷ்மான்யா

*பிரசுரத்துக்குத் தேர்வான படைப்புகளை அனுப்பியவர்களுக்கு வாழ்த்துகள். உற்சாகத்துடன் பங்கேற்றவர்களுக்கு நன்றி!*



இன்னிக்கு எவ்வளவு ஜெயிச்சே?''

''எட்டு ரூபாய் ஸார்...'' என்பான் உற்சாகமாக.

''டீ வாங்கிட்டு வா... அப்படியே சிகரெட்டும்...''

டீ முப்பது பைசா. வடை நாலணா. அப்புறம் சிகரெட். தினமும் வாத்தியாருக்காக எழுபத்தைந்து பைசா செலவு செய்தான்.

கொஞ்ச நாளில்-

நடராஜ் வாத்தியார், ''முருகேசா'' என்று தான் குரல் கொடுப்பார். முருகேசன் எழுந்து கடைக்கு ஓடுவான். டீ டம்ளரைத் திருப்பிக் கொடுக்க கடைக்குப் போகும் முருகேசன் திரும்பி வரமாட்டான். பள்ளி விட்டதும் காளீஸ்வரன் அவன் புத்தகப் பையையும் எடுத்துக்கொண்டு போவான்.

மூன்றாம் வகுப்பு வரை ஒவ்வொரு பாடத்துக்கும் ஒவ்வொரு ஆசிரியர் வந்துகொண்டிருந்தார். கண்மணி டீச்சர் வகுப்பு என்றால் ஆர்வமாகிவிடுவோம். நிறைய கதை சொல்வார்கள். கணக்குக்கு பழனிச்சாமி வாத்தியார். அவருக்குக் கோபமே வராது. ஏதாவது தமாஷ் சொல்லிச் சிரிக்க வைப்பார். மருதமுத்து வாத்தியார் நிறைய படங்கள் வரைந்து பாடம் நடத்துவார்.

நான்காம் வகுப்பு வந்தபோது சட்டம் மாறியது. எல்லாப் பாடங்களுக்கும் ஒரே வாத்தியார். எங்களுக்கு எல்லா பாடத்துக்கும் நடராஜ் வாத்தியார். பக்கத்து வகுப்பில் கண்மணி டீச்சர் பாடம் நடத்துவது இங்கே கேட்கும். கதைகள் கொஞ்சம் கொஞ்சமாகக் கேட்கும். ஒரு நாள் ஆனந்தவேல் கேட்டான், ''நமக்கு வேற வாத்தியார் வரமாட்டாங்களாடா?'' ஐந்தாம் வகுப்பிலும் எங்களுக்கு நடராஜ் வாத்தியாரே வந்தார்.

முருகேசனின் அப்பாவைப் பார்ப்பது அபூர்வம். அவர் லாரி டிரைவர். வாரத்துக்கு ஒருமுறை அல்லது மாதத்துக்கு ஒருமுறை வருவார். அவர் வருகையின் போது முருகேசனிடம் நிறைய காசு புரளும்.

**அவனுடைய அப்பா யாரையோ கொலை செய்துவிட்டு ஜெயிலுக்குப் போய் வந்திருப்பதாக காளீஸ்வரன் சொல்லியிருக்கிறான்.**

எனக்கு வீட்டில் தினமும் செலவுக்கு இரண்டு பைசா கொடுப்பார்கள். அது ஒரு ஜம்பர் மிட்டாய் வாங்கச் சரியாயிருக்கும். முருகேசன், எனக்கும் காளீஸ்வரனுக்கும் தினமும் தின்ன ஏதாவது வாங்கிக் கொடுப்பான். எனக்கு சினிமா பட பிக்சர் (பிலிம் துண்டு) ரொம்பவும் பிடிக்கும். எம்.ஜி.ஆர்., சிவாஜி பட பிக்சர் எல்லாம் கிடைக்கும். மூணு பைசாவுக்கு மூன்று பிக்சர் துண்டுகள் கிடைக்கும். முருகேசன், பிக்சர் வாங்கிக் கொடுப்பான். காளீஸ்வரன், லென்சு வைத்து படம் காண்பிப்பான். படம் பார்த்த மாதிரியே படத்தின் கதையைச் சொல்லுவான். முருகேசன் எல்லாப் படங்களையும் பார்த்திருப்பான். வாராவாரம் டவுனுக்குப் படம் பார்க்க அவன் அம்மாவோடு போய்விடுவான். கோயமுத்தூரில் இருந்து வந்து எங்கள் பள்ளிக்கூடத்தில் புதிதாய்ச் சேர்ந்த சரவணன், ''ரஜினி, ரஜினி'' என்று ஒரு புதுப் பேரைச் சொன்னான். எங்களுக்குத் தெரிந்ததெல்லாம் எம்.ஜி.ஆர். கட்சி, சிவாஜி கட்சி. எப்போதாவது ஊருக்குள் ஓலைக் கொட்டகையில் சினிமா பார்க்கக் கூட்டிப் போவார்கள். மூன்று மைல் நடந்து போக வேண்டும்.

முருகேசன் அவனுடைய அப்பாவைப் பற்றி நிறைய சொல்லுவான்: ''எங்கப்பா மெட்ராஸ் எல்லாம் போயிட்டு வந்திருக்காரு'', ''எங்கப்பாகூட யாரு சண்டை கட்டுனாலும் ஜெயிக்க முடியாது.''

அவனுடைய அப்பா யாரையோ கொலை செய்துவிட்டு ஜெயிலுக்குப் போய்விட்டு வந்திருப்பதாக காளீஸ்வரன் சொல்லியிருக்கிறான். முருகேசனின் அப்பா கண்கள் சிவக்க எப்போதும் போதையில் இருப்பார். முருகேசன், அவருக்குச் சாராயம் வாங்க சாராயக்கடைக்குப் போவானாம்.

முருகேசன் வீட்டு உச்சியில் எப்போதும் ஒரு கட்சிக் கொடி பறந்து கொண்டிருக்கும். ஒரு தடவை என்னை அவன் வீட்டுக்குக் கூட்டிப் போயிருக்கிறான். அப்போது அவனுடைய அம்மா என்னை என்ன ஜாதி என்று விசாரித்து

''அடுத்த நூறு நாட்களில் நீங்கள் என்ன செய்வீர்கள் என்பதைச் சொல்ல முடியுமா?''

''அதைச் சொன்னால் நான் இப்பவே மாட்டிக்குவேனே.''

-எஸ்.மோகன்



விட்டுத்தான் வீட்டுக்குள் அனுமதித்தார்.

நடராஜ் வாத்தியார் ஊருக்குள் ஒரு முக்கியப்புள்ளி ஆகிவிட்டார். அவருடைய ஜாதிச் சங்கத்தில் முக்கியப் பொறுப்பில் இருந்தார். ஐந்தாம் வகுப்பு போனபோது அவர் வகுப்புக்கு வருவது அபூர்வமாகிவிட்டது. முருகேசன், ஒரு ஆறுமாதங்கள்தான் பள்ளிக்கூடம் வந்திருப்பான். அப்புறம் நின்றுவிட்டான். எப்போதும் குண்டு விளையாட்டுதான். காளீஸ்வரன், அவன் வீட்டுக்குப் போய் அவனைக் கூப்பிட்டிருக்கிறான். அவனுடைய அம்மா, ''அவன் இனிமே பள்ளிக்கூடம் வரமாட்டான். படிச்சு என்ன செய்யப்போறான்? படிச்சவரைக்கும் போதும்'' என்று சொல்லிவிட்டதாம். அவன் பிடி பிடிப்பதாக காளீஸ்வரன் சொன்னான். வெள்ளியங்கிரியும் பார்த்திருக்கிறான்.

**"அவன் இனிமே பள்ளிக்கூடம் வரமாட்டான். படிச்சு என்ன செய்யப்போறான்?"**



முருகேசனை எப்போதாவது பார்ப்பேன். சிரித்துத் தலையசைத்துவிட்டுப் போய்விடுவான்.

ஆறாம் வகுப்புக்கு பெரிய பள்ளிக்கூடத்தில் சேர்ந்தோம். பக்கத்து ஊருக்கு தினமும் இரண்டு மைல் தூரம் நடந்து போய்வருவோம். முருகேசன் லாரியில் க்ளீனர் வேலைக்குப் போகிறானாம். அவனை ஒரு நாள் லாரியில் பார்த்தேன். நாங்கள் பள்ளிக்கூடத்துக்கு நடந்து போய்க் கொண்டிருக்கும்போது, ஹாரன் சத்தத்தோடு அலறிக்கொண்டு லாரி ஒன்று வந்தது. முருகேசன் வெளியே தலையை நீட்டி, கூடத்தைப் பார்த்தபடி, ''ரைட்! ரைட்! போலாம்... போலாம்...'' என்று சொல்லிக் கொண்டிருந்தான்.

நடராஜ் வாத்தியார், தலைமையாசிரியராகப் பதவி உயர்வு பெற்று டவுன் பள்ளிக்கூடத்துக்குப் போய்விட்டார். அப்புறம் அவரைப் பார்க்கவேயில்லை.

**1997**-ல் ஒரு நாள் -

நான் பிளஸ் டூ முடித்து ஏழெட்டு வருஷங்கள் ஆகிவிட்டன. அப்புறம் ஐ.டி.ஐ. முடித்தேன். இப்போது கோயமுத்தூர் பெரியநாயக்கன்பாளையத்தில் ஒரு மில்லில் ஃபிட்டராக வேலைக்கு இருக்கிறேன்.

உணவு இடைவேளை. கேண்டீனில் சாப்பாட்டை முடித்துவிட்டு, செய்தித்தாள் படிப்பதற்காக பிரபு சலூனுக்குள் நுழைந்தேன். தினத்தந்தியை எடுத்துப் படிக்க ஆரம்பிக்கிறேன்.

குடிபோதையில் கலாட்டா. வாலிபர் கத்தியால் குத்திக் கொலை. தலைப்பைப் படித்துவிட்டு புகைப்படத்தைப் பார்க்கிறேன்... முருகேசன்! அதிர்ச்சியோடு செய்தியைப் படிக்கிறேன்...

கொஞ்ச வருஷங்களுக்கு முன்னால் முருகேசன் கட்சி, கட்சி என்று அலைந்து கொண்டிருந்தது நினைவுக்கு வருகிறது.

முருகேசனின் இந்த முடிவுக்கு என்ன காரணம் என்று யோசிக்க ஆரம்பிக்கிறேன். அவனுடைய அப்பாவா? அம்மாவா? வாத்தியாரா? அரசியலா? எல்லாம் ஒரு புள்ளியில் வந்து நிற்கின்றன.

குழப்பத்தோடு செய்தித்தாளைப் புரட்டுகிறேன். நீங்கள் நம்ப மாட்டீர்கள். கடைசிப்பக்கத்தில் நடராஜ் வாத்தியார் படம். அவருக்கு நல்லாசிரியர் விருது கிடைத்திருப்பதாகச் செய்தி. ●

ஒரு வார்த்தை...

"தலைவர் சொன்ன ஒரு வார்த்தைக்காகவே எல்லா வேட்பாளர்களும் தோத்துட்டாங்களாமே..."

"ஆமா..எல்லா தொகுதியிலேயும் நானே நிற்கிற மாதிரி நினைச்சு வோட்டுப்போடுங்கன்னு சொல்லியிருக்கிறார்.."

எம்.மிக்கேல்ராஜ்

# முக்கனி... 'கிக்'கனி!

● பாகீரதி, டெல்லி.

***டி.கே.பட்டம்மாள் மறைவு குறித்து?***

மேதைகள் மறைவதில்லை. மகாகவி பாரதியாரின் 'மறு ஒலிபரப்பு' டி.கே. பட்டம்மாள். டி.கே.பட்டம்மாளின் நேர்முக வர்ணனை நித்யஸ்ரீ மகாதேவன். வழிபாட்டுக்குரிய டி.கே.பட்டம்மாள், நித்யஸ்ரீ மகாதேவனின் பாடும் வாய் வழிப்பாட்டியாக வாழ்ந்து கொண்டிருப்பார்.

● ஜே.வி.ஜே.கண்ணன், திருச்சி

***நியூமராலஜிக்கு ஏற்ப நமது பெயரிலுள்ள எழுத்துக்களை மாற்றி அமைப்பதால் நமது தலையெழுத்தை மாற்றிவிட முடியுமா?***

'ராமா ராமா' என்று உச்சரிக்கத் தெரியாத வேடனை, 'மரா மரா' என்று மாற்றிக் கூறச் சொன்னார் மாமுனி நாரதர். மாற்றி அமைத்து 'மரா மரா' என்று ஜபித்த வேடனின் தலையெழுத்து மாறி, வால்மீகி முனிவரானார். நாரதரின் இந்த 'மரா'லஜிதான் புதிதாக இன்று NEWமராலஜியாக நிலவுகிறதோ...

● எஸ்.பிரசன்னகுமார், காட்பாடி

***ஏழையின் சிரிப்பில் இறைவன் என்றால், இறைவனின் சிரிப்பில்?***

அந்த ஏழையைச் சிரிக்க வைத்தவன்!

● பா.அசோக், விருதுநகர்

***பெரிய்ய்ய்ய... ராமாயண, மகாபாரத இதிகாசக் கதைகளைச் சிறியதாக புதுக் கவிதையில் கூற முடியுமா...?***

எனக்கு கவிதை கற்றுத் தந்த என் நண்பன் சு.இரவி, கணக்கு வாத்தியார் மகன். அதனால் 'புதுப்-பழங்கணக்குக் கவிதையில்' கூறுகிறேன்.

''ஒன்றுக்குப் பத்து ராமாயணம்
அஞ்சுக்கு நூறு அதாவது
ஒன்றுக்கு இருபது மகாபாரதம்
ஆகவே ராமாயணம் ஈஸ் டு மகாபாரதம்
ஈஸ் ஈக்வல் டு
One is to Two...''

● சோலையப்பன், அறந்தாங்கி

***ஆண்கள் அளவு பெண்கள் கண்ணடிப்பது இல்லையே கிரேஸி... ஏன்?***

கண்ணடிப்பது MANnerism; கண்ணடித்தவனை கண் மண் தெரியாமல் கிறங்க அடிப்பது WOMANarism!

● எஸ்.வி.பார்த்தசாரதி, திருச்சி

***மிருகங்களுக்கு சிந்திக்கும் ஆற்றல் வந்துவிட்டால்?***

ஆபத்துக்குப் பாதகமில்லை என்று, பசித்த புலி புல்லைத் தின்று விட்டு, நார்ச்சத்து உடம்புக்கு நல்லது எனக் கூறிச் சமாளிக்கும்.

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

***'சீரியஸாக' குடும்பக் கதையை வைத்து உங்களால் ஒரு நாடகம் எழுத முடியுமா?***

குடும்பம் என்றாலே அழுது வடியும் 'சீரியஸ்'தான் என்று சொல்லும் அளவுக்கு, உங்கள் மனத்தை மெகா-சீரியல்கள் பாதித்திருக்கின்றன. எனக்கு க்ரேஸி-சோகனாக இஷ்டமில்லை!

● அனுராதா சுரேஷ், பாண்டிச்சேரி

## கிரேஸியைக் கேளுங்கள்



**குளிக்கும்போது தனியாகப் பாடும் பழக்கம் தங்களுக்கு உண்டா?**

எனக்கு எதற்கும் ஆடியன்ஸ் தேவை. குளிக்கும்போது பாடும் ஆசை வந்தால், குளியலை மியூசிக் அகாடமியில் அரங்கேற்றுவேன். ரசிகர்களை இசை வெள்ளத்தில் நனைய வைப்பேன்.

● **ச.ஆ.கேசவன், இனாம்மணியாச்சி**

**வாழ்க்கை என்பது சிறுகதையா இல்லை பல அத்தியாயங்கள் கொண்ட தொடர்கதையா?**

ஒன்றின் மீது ஒன்றாக பல சிறுகதைகள் அடுக்கப்பட்ட Multi-storey சஸ்பென்ஸ் தொடர்கதை, சஸ்பென்ஸ் கதையில் அல்ல, கதையை முடிப்பதில்தான். எழுத்துச் சுதந்திரத்தை நமக்கு அளித்துவிட்டு, முற்றும் போட மட்டும் மேல்மாடியில் காத்திருக்கும் மகா பெருசு.

● **லதா ரங்கன், சூளைமேடு**

**சிரிக்கவே தெரியாத 'உம்மணா மூஞ்சிகளை'ப் பற்றி?**

சிரிப்பு முகத்தில் அணியும் ஆடை. சிரிக்கத் தெரியாதவர்கள் 'அம்மணாமூஞ்சிகள்'.

● **ஆர்.பி.ஜெயச்சந்திரன், பூனாம்பாளையம்**

**கடமையைச் செய்துவிட்டு பலனை எதிர்பார்க்காமல் இருக்க முடியுமா?**

ஏன் முடியாது? மரணத்தை எதிர்பார்த்தா வாழ்கின்றோம்!

● **மு.மதிவாணன், அரூர்**

**உலகில் எத்தனையோ கனிகள் இருக்க, பெண்களின் கன்னத்துக்கு உவமையாக ஆப்பிள் ஏன்?**

மா-பலா-வாழை 'முக்கனி'. ஆப்பிள்தான் 'இக்-கனி'. 'டேக் ஏவான்ஸ் ஆப்பிள் எ டே அண்ட் கீப் நோவால்ஜீன்ஸ் அவே.'

(கிரேஸி ட்ரீட் 53-ஆம் பக்கம்)

"வெறும் படிப்பு மட்டுமே ஒருவருக்கு வேலை வாங்கிக் கொடுத்துவிடாது. ஒரு நல்ல நிறுவனத்தில் நல்ல வேலையில் சேர வேண்டுமென்றால், அதற்காக உங்களை நீங்களே தயார்ப்படுத்திக் கொள்ள வேண்டும்" என்கிறார் RIPE இன்ஸ்டிட்யூட்டின் நிர்வாக இயக்குநர் வி.வி.ஏ.ஸ்ரீராம். கல்லூரி மாணவர்களான ஸ்ரீநாத், சுபஸ்ரீ, கிருஷ்ணமூர்த்தி மூவரும் அவரைச் சந்தித்தனர்.



**ஸ்ரீநாத் (பி.காம்., மூன்றாம் ஆண்டு, விவேகானந்தா கல்லூரி):** வணக்கம் ஸார். ஒருத்தர் வாழ்க்கையில் வெற்றி பெற ணும்னா முதல்ல அவங்களுக்குத் தேவை 'கோல் ஸெட்டிங்'ன்னு சொல்றாங்களே... அந்த 'கோல் ஸெட்டிங்'கறது எப்படி இருக் கணும்? எந்த அடிப்படையில நம்ம கோல் அமையணும்?

**வி.வி.ஏ.ஸ்ரீராம்:** முதல்ல இளைஞர்கள் தங்களுக்கு என்ன தேவைங்கறதை முடிவு பண்ணிக்கணும். அம்மா சொன்னாங் கன்னு இதைச் செஞ்சேன். அப்பா சொன் னாங்கன்னு இதைப் படிக்கறேன்னு சொல் லக்கூடாது. உங்களுக்கு ஒரு தனிப்பட்ட குறிக்கோள் கட்டாயம் இருக்கணும். உங் களைப் பத்தி உங்களுக்கு நல்லா தெரிய ணும். உங்களைப் பத்தின எண்ணம் உயர்வா இருக்கணும். எப்பவும் எதிலும் தன்னம்பிக்கையோட செயல்படக்கூடிய ஒரு மனோபாவத்தை வளர்த்துக்கணும். இந்தக் குறிப்பிட்ட காலகட்டத்துக்குள்ள நான் இதை நிச்சயம் செய்து முடிச்சிடு வேன்னு தீர்மானம் வெச்சுக்கறதுதான் கோல் ஸெட்டிங். கட்டாயம் எல்லாருமே ஒரு கோல் வெச்சுக்கிட்டு அதுக்காக உழைச்சிங்கன்னா நிச்சயம் வெற்றி பெற லாம். சரி, உங்களோட சிறந்த 'ரோல் மாடல்' யாரு?

**சுபஸ்ரீ (எம்.எஸ்ஸி., முதலாம் ஆண்டு, எம்.சி.சி.):** கல்பனா சாவ்லா

**கிருஷ்ணமூர்த்தி (பி.எஸ்ஸி., மூன் றாம் ஆண்டு, குருநானக் கல்லூரி) :** அப்துல் கலாம்

**ஸ்ரீநாத்:** சச்சின்

**வி.வி.ஏ.ஸ்ரீராம்:** ஏன் ஒவ்வொருத்தங் களும் உங்களைத் தவிர வேறு யார் பெயரையோ சிறந்த 'ரோல் மாடல்'ன்னு சொல்றீங்க. உங்களுக்கு நீங்களே ஏன் சிறந்த 'ரோல் மாடலா' இருக்கக்கூடாது? வெளிநாடுகள்ல போய் அங்கே இருக்கற வங்ககிட்ட, 'உங்களுக்குப் பிடிச்ச ரோல் மாடல் யாரு?'ன்னு கேட்டுப் பாருங்க.

**உங்களிடம் உள்ள ப்ளஸ்களை மட்டுமே வலுவாகக் கொண்டு செயல்பட்டால் வெற்றி நிச்சயம்**



# உனக்காக ஒரு கோல்!

டக்குன்னு, 'எனக்குப் பிடிச்ச ரோல் மாடல் நான்தான்'னு சொல்லுவாங்க. நமக்கு நம்மை முதல்ல பிடிக்கணும். அப்புறம் கல்பனா சாவ்லாவோட தைரியம் பிடிக்கும். அப்துல்கலாமோட அறிவாற்றல் பிடிக்கும். சச்சினோட விளையாட்டுத் திறமை பிடிக்கும்... அப்படீன்னு சொல்லப் பழகுவோம்.

**கிருஷ்ணமூர்த்தி:** ஜாப் ஸ்கில்ஸ்னு சொல்றாங்களே அப்படீன்னா என்ன? அதை எப்படி வளர்த்துக்கணும்?

**வி.வி.ஏ :** SWOT என்று ஆங்கிலத்தில் சொல்வோம். Strength, weakness, opportunity, threat. அதாவது உங்களுக்குள் இருக்கும் மிகப் பெரிய ப்ளஸ் பாயிண்ட் என்ன, மைனஸ் பாயிண்ட் என்ன, உங்களது சூழ்நிலை எப்படி இருக்கிறது, எது எல்லாம் உங்களுக்குச் சாதகமாக இல்லை என்பதை ஒரு பேப்பரில் எழுதி வைத்துக்கொண்டு உங்களைப் பற்றி நீங்களே ஆராய்ந்து, மைனஸ் பாயின்ட்களைப் பற்றித் துளியும் சிந்திக்காமல் உங்களிடமுள்ள ப்ளஸ்களை மட்டுமே எருவாகக் கொண்டு செயல்பட்டால் நல்ல வேலை நிச்சயம் கிடைக்கும். Communication skill எந்த ஒரு வேலைக்கும் அடிப்படையாகத் தேவைப்படும் ஒரு விஷயம். நன்றாக, சமயோசிதமாக எல்லோரிடமும் உரையாடும் ஒரு கலையைக் கல்லூரி நாட்களிலேயே கற்றுக்கொள்ள வேண்டும்.

**சுபஸ்ரீ:** இந்த டைம் மேனேஜ்மென்ட்னு சொல்லப்படற விஷயம்... அதாவது நேரத்தை எப்படி சரியான முறையில் செலவழிப்பது?

**வி.வி.ஏ.:** நம் எல்லோருக்கும் இருப்பது 24 மணி நேரம்தான். ஆனால் நாம் அதை எப்படி செலவழிக்கிறோம் என்பதைப் பொறுத்துத்தான் வாழ்வின் வெற்றி அமைகிறது. கட்டாயமாக நாம் செய்ய வேண்டிய வேலைகள்னு பார்த்தால் 6 மணி நேரம் தூக்கம், 1 மணி நேரம் சாப்பிடுவதற்கு, உங்களை மாதிரி காலேஜ் மாணவர்களுக்கு 2 மணி நேரம் காலேஜுக்கான பயண நேரம், 8 மணி நேரம் காலேஜுல படிப்பதற்கு... 17 மணி நேரம் கட்டாயம் இதெல்லாம் செஞ்சாகணும். மீதி இருக்கிற நேரத்துல தினம் ஒரு அரை மணி நேரமாவது உங்களுக்கு உங்களுக்கான நேரமா, உங்களோட முன்னேற்றத்துக்கான நேரமா வெச்சுக்கணும்.

**மூவரும் சேர்ந்து:** நிறைய நல்ல நல்ல அறிவுரைகளை எளிமையா எடுத்துச் சொன்னீங்க ஸார். ரொம்ப நன்றி.

**வி.வி.ஏ.:** வாழ்க்கையில என்ன சாதிக்கணும்னு நினைக்கறீங்களோ அதை ஒரு பேப்பர்ல எழுதி கண்ல படற மாதிரி மாட்டி வெச்சுக்குங்க. தினமும் அதைப் பார்க்கும்போது நாம் சாதிக்கணும். சாதிச்சே தீரணும்ங்கற அந்த வெற்றி வெறி, உங்களைத் தானாகவே பல சாதனைகள் புரிய அழைத்துச் செல்லும்... வாழ்த்துக்கள்!

**- நளினி சம்பத்குமார்**



''ஸார் என் பேரு கார்த்திக். உத்தம பாளையம் கோகிலாபுரம் கிராமத்துல இருக்கேன். ஏழாவது படிக்கிறேன். என் தங்கச்சி சார்மிளா ஐந்தாவது படிக்கிறா. எங்களுக்குப் பாட்டி மட்டும்தான். சாப் பாட்டுக்கு ரொம்ப கஷ்டப்படறோம் ஸார்.''

தொலைபேசி வழியே ஒலிக்கிறது ஒரு சிறுவனின் கலக்கமான குரல். அவனைப் பற்றிய விவரங்களைப் பொறுமையாகவும் அன்பாகவும் விசாரிக்கிறார். தேனி மாவட்ட கலெக்டர் முத்துவீரன். அடுத்த சில நாட்களில் அந்தச் சிறுவனும் அவன் தங்கையும் உண்டு, உறைவிடப் பள்ளியில் சேர்க்கப்படுகிறார்கள். பாட்டி பேச்சி யம்மாளுக்கு முதியோர் உதவித் தொகைக் கான ஏற்பாடு செய்யப்படுகிறது. மூவரின் முகங்களும் வாழ்க்கையை எதிர்கொள்ளும் நம்பிக்கையோடு சிரிக்கின்றன.

'அட! ஒரு பன்னிரண்டு வயது சிறு வனால் கூட இவ்வளவு எளிதாக கலெக்டரி டம் பேச முடிகிறதா?' என்ற வியப்பு ஏற் படுகிறதா? தேனி மாவட்ட மக்களுக்கு ஆரம்பத்தில் இந்த வியப்பு உண்டானது நிஜமே. இப்போது பழகி விட்டது. அந்த அளவுக்கு தேனி மாவட்டம் முழுக்க, தேடிச் சென்று தேவைகளைப் பூர்த்தி செய்கிறார் மாவட்ட ஆட்சியர்.

மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவல கங்களில் ஒவ்வொரு திங்கட்கிழமை யன்றும் மனுநீதி நாள் (கிரீவன்ஸ் டே) நடைபெறும். தேனி மாவட்ட கலெக்டர் முத்துவீரன் செயல்படுத்தி வரும் 'மக்களை நாடி... மாவட்ட நிர்வாகம்' முற்றிலும் மாறுபட்டது. மாவட்டத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் குறிப்பிட்ட நாட்களில், மாவட்ட நிர்வாகம் நேரில் சென்று முகாமிடுகிறது. அரசின் அனைத்துத் துறை அதிகாரிகளும் அங்கு கூடுகின்றனர்.

''முதல் நாள் மதியம் சுற்றுவட்டாரக் கிராமப் பொதுமக்கள் ஏதோ திருவிழா போல கூடுகின்றனர். மாவட்ட கலெக்டரி



ஒரு நபர், கலெக்டர் ஆபீஸ் வந்து போக குறைந்தது நூறு ரூபாயும் ஒரு நாளும் செலவாகும். இதில் இடைத்தரகர் தொல்லை வேறு. இதற்கெல்லாம் முற்றுப்புள்ளி வைக்க தொடங்கப்பட்டதே 'மக்களை நாடி... மாவட்ட நிர்வாகம்' திட்டம். இது

# தேடிவரும் தேனி கலெக்டர்



* முத்துவீரன்

டம் மனு தருகிறார்கள். தங்கள் பகுதி தேவைகளைப் பட்டியலிடுகின்றனர். அன்று மாலையே குறிப்பிட்ட இடங்களுக்கு கலெக்டர் நேரில் சென்று பார்வையிடுகிறார். இரவு பத்து மணி வரை இந்தப் பணி தொடர்கிறது. பதினொரு மணியளவில் அவர் பயணம் எந்தக் கிராமத்தில் முடிகிறதோ அங்கேயே ஒரு சாதாரண வீட்டில் தங்குகிறார். அதிகாலை ஐந்து மணிக்கு எழுந்து சாதாரண உடையில் டீக்கடையில் டீ குடித்து விட்டு, அங்கிருந்து தொடங்கிவிடுகிறார் விசாரணைகளை!'' எனக் கூறுகிறார் காமாட்சிபுரம் ஊராட்சி மன்றத் தலைவர் பச்சையப்பன்.

''முதல் நாள் மதியம் அளித்த மனுக்கள் மீது, மறுநாள் காலை தீர்வு காணப்படுகிறது. கலெக்டர் ஆபீஸ் நோக்கி மக்கள் படையெடுப்பதற்குப் பதிலாக, கிராமங்கள் நோக்கி மாவட்ட நிர்வாகமே திரண்டு வந்து செயல்படுவது எங்களுக்குப் புதிதாக உள்ளது'' என்கிறார் இராமசாமிநாயக்கன் பட்டி ஊராட்சி மன்றத் தலைவி மணிமேகலை.

''**மா**வட்டத்தின் எந்தவொரு கிராமத்திலிருந்தும் தன்னுடைய தேவைக்காக

வரை நடந்த ஐந்து முகாம்களில் சுமார் பன்னிரண்டாயிரம் மனுக்கள் பெறப்பட்டுள்ளன. அவற்றில் சுமார் ஒன்பதாயிரம் மனுக்கள் மீது உடனடி நடவடிக்கையும் தீர்வும் காணப்பட்டுள்ளன. இன்னும் நான்கு மாதங்களுக்குள், மாவட்டத்தின் எல்லாப் பகுதிகளிலும் இந்த முகாம் நிகழ உள்ளது!'' என நம்பிக்கை தெரிவிக்கிறார் முத்துவீரன்.

– ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

## அருண் சரண்யா




அக்காலத்தில் எவ்வளவு நீண்ட தொலைவு செல்லவேண்டுமென்றாலும் கால்கள்தானே வாகனம். வெகு நீண்ட பயணத்துக்குப் பிறகு பண்டரிபுரம் வந்துசேர்ந்த புரந்தரதாசர் விட்டலனைக் கண்டு நெகிழ்ந்தார். பாடி மகிழ்ந்தார். அங்கேயே சில காலந்துக்குத் தங்கிவிடத் தீர்மானித்தார்.

ஒருநாள் இரவு புரந்தரதாசருக்கு உறக்கம் வரவில்லை. கடுமையான கால்வலி. தம்முடைய சீடன் அப்பண்ணாவைப் பலமுறை அழைத்தார். "கால் வலிக்கிறது. ஒத்தடம் தேவை, வெந்நீர் கொண்டு வா" என்றார். சீடன் அப்பண்ணா வேறொரு அறையில் அசந்து தூங்கிக் கொண்டிருந்தான்.

வலி தாங்க முடியாமல் கதறத் தொடங்கினார் புரந்தரதாசர்.

ஒருவழியாக அப்பண்ணா வெந்நீருடன் வந்துசேர்ந்தான். வலியின் காரணமாக கடும் கோபத்தில் இருந்த புரந்தரதாசர்

# வெந்நீர் அபிஷேகம்!

அந்த வெந்நீரை சீடனின் முகத்தின்மீது வீசியெறிந்தார். திகைத்துப்போன சீடனும் அங்கிருந்து நகர்ந்து சென்றுவிட்டான்.

தம் தவறை உணர்ந்த புரந்தரதாசர் நேரே சீடனின் அறைக்குச் சென்றார். மறுபுறம் திரும்பிப் படுத்துக்கொண்டிருந்த அப்பண்ணாவைப் பார்த்து நெக்குருகினார்.

"அப்பண்ணா நீ கொஞ்சம் தாமதமாக வெந்நீர் கொண்டு வந்ததற்காக நான் அப்படி நடந்து கொண்டிருக்கக் கூடாது" என்றார்.

குருவின் குரலைக் கேட்டு பாயைச் சுருட்டிக்கொண்டு எழுந்த அப்பண்ணா, "என்ன சொல்கிறீர்கள் குருவே? நேற்று இந்த அறைக்கு வந்தவுடன் தூங்கத் தொடங்கிய நான் இப்போதுதானே எழுந்துகொண்டேன்" என்றான் வியப்பு பொங்க.

புரந்தரதாசர் குழம்பினார். ஒருவேளை ஏதேனும் கனவுகண்டு அதை உண்மையென நினைத்துக்கொண்டு விட்டோமோ?

பொழுது மேலும் விடிய, சந்திரபாகா நதியில் நீராடிவிட்டு விட்டல தரிசனத்துக்குக் கிளம்பினார். இந்தமுறை தரிசனம் அவர் எதிர்பாராத ஒன்றாக அமைந்தது. பாண்டுரங்கனின் முகம் முழுவதும் வெப்பக் கொப்புளம். முதலில் பெரும் அதிர்ச்சி என்றாலும், சில நொடிகளிலேயே புரிந்து கொண்டார் புரந்தரதாசர்.

"பாண்டுரங்கா, என் வலியைப் போக்க அப்பண்ணாவின் வடிவில் வந்தது நீதானா? உன் மீதா நான் வெந்நீரை வீசினேன்? என்னை மன்னித்துவிடு. இனி என் கோபத்தை விட்டொழிப்பேன் விட்டலா" என்று அலறியபடி சன்னிதியின் முன்பு சரணாகதியாக நமஸ்கரித்தார்.

சிறிது நேரத்துக்குப் பிறகு கண்கள் கலங்க அவர் தலையை உயர்த்தியபோது, விட்டலனின் முகம் மீண்டும் முன்புபோல பளிங்காக மின்னியது.

ராமநாதன் மனமுருகக் கூறிமுடிக்க, "நாம் தரிசித்தபோது கண்ணனின் முகத்

தில் சில சின்னச் சின்ன பள்ளங்கள் தட்டுப் பட்டமாதிரி இருந்த னவே!'' என்றான் ஜருகண்டி.

''ஒருவேளை அவை புரந்தரதாசரை நினைவுபடுத்துவதற்காக இருக்கலாம்.''

''கோபத்தைக் கட்டுப்படுத்து என்று உலக மக்களை எச்சரிப் பதற்காகவும் இருக்க லாமே'' என்ற ஜருகண்டியை அனை வரும் ஆச்சரியமாகப் பார்த்தோம்.

''அடுத்தது கோபால்புரி இல் லையா?'' என்றான் ஜருகண்டி.




**ப**ண்டரிபுரத்திலிருந்து சுமார் மூன்று கிலோ மீட்டர் தூரத்தில் உள் ளது கோபால்புரி. சிறுமிக்கும் அருள் புரிந்த ஸ்ரீவைகுண்ட வாசனின் புகழ் கூறும் பூமி அது. சொல்லப்போனால் அது ஜனாபாயின் புகழைப் பரப்பிக் கொண்டிருக்கும் இடம்.

பண்டரிபுரத்திலிருந்து கோபால்புரி மற்றும் மங்களவேடா (மங்களவேடாவின் மகிமையைப் பற்றிப் பிறகு பார்ப்போம்) ஆகிய இரு இடங்களுக்கும் சென்றுவர ஆட்டோவைத் தேர்ந்தெடுத்தால் நூறு ரூபாய் கொடுக்க வேண்டியிருக்கும். மற்ற படி பேருந்து, படகு ஆகிய இரு மார்க்கங் களிலும் கோபால்புரியை அடையலாம்.

''கோபால்புரிக்குப் போகும்போதே விஷ்ணுபாதம் தரிசிக்கலாம் இல்லையா?'' என்று கேட்டார் ராமநாதன்.

ஆட்டோக்காரர் ஆமோதித்தார்.

''அப்படின்னா ஜனாபாய் தரிசனம் இன்னும் தள்ளிப்போகுதா?'' என்று கேட்டான் ஜருகண்டி.

''யார் சொன்னது? விஷ்ணுபாதத்தி லேயே கூட ஜனாபாய் சன்னிதி ஒண்ணு உண்டு. தவிர ஆட்டோவில் போகும் போதே ஜனாபாய் சரிதத்தையும் உனக்குச் சொல்லப்போறேன்.''

ஆட்டோ கிளம்பியது. பாதி தூரம்

### அபங்க அமுதம்

பக்ஷீஜாய திகந்தரா
பாளகாஸீ ஆணீசாரா
கார ஹிண்டதே ஆகாசீ
ஜாம்ப காலீ பில்லாபாஸீ
மாதா குந்தலீ காமாஸீ
சித்த திசே பாளாபாசீ
வானர ஹிண்டே ஜாடாவரீ
பிலீ பாந்துனீ உதரீ
தைஸீ ஆஹாஸீ விட்டலமாயே
ஜனீ வேளோவேளா பாஹே

– ஜனாபாய்

"தன் குஞ்சுகளுக்கு இரைதேட பறவை பல திசைகளிலும் பறக்கிறது. அப்போது ஆகாயத்தில் பருந்து வட்டமிடுவதைப் பார்த்தால் உடனே தன் குஞ்சுகளைக் காப்பாற்ற அங்கு பறந்து செல்கிறது. குரங்கு கூட மரத்துக்கு மரம் தாவினாலும் தன் வயிற்றைக் கட்டிக்கொண்டிருக்கும் தன் குட்டிக்குப் பாதிப்பு வராதபடி பார்த்துக் கொள்கிறது. அதுபோல விட்டலன் உலகில் பலரையும் பாதுகாத்தாலும் என்னையும் மறக்காமல் இருக்கிறான்."

வரை சமாராக இருந்த பாதை அதற்குப் பிறகு மேடும்பள்ளமுமாக மாறியது.

வழியில் பலவிதப் பணிகளில் ஈடுபட்டிருந்த கிராம மக்கள் ஒரு மினி இந்தியாவின் ஆத்மாவைக் கண்முன் கொண்டு வந்தனர்.

ராமநாதன் ஜனாபாயின் சரித்திரத்தைக் கூறத்தொடங்கினார்.



**"பாண்டுரங்கா, என் வலியைப் போக்க அப்பண்ணாவின் வடிவில் வந்தது நீதானா? உன் மீதா நான் வெந்நீரை வீசினேன்?"**

"அது ஒரு கார்த்திகை மாதம். ஏகாதசித் திருநாள். பல நூறு பக்தர்கள் ஆடலும் பாடலுமாக விட்டலனை வழிபட்டுக் கொண்டிருந்தார்கள். வெளியூர்களிலிருந்தும் பக்தர்கள் குழுமியிருந்தார்கள்.

பலவித பாடல்களுக்கு மத்தியிலும் ஒரு குறிப்பிட்ட குரல் தனித்துக் கேட்டது. அந்தக் குரல் வந்த திசையில் அனைவரும் கவனத்தைத் திருப்பினார்கள். அவர்கள் விழிகளில் வியப்பு தெரிந்தது. விட்டலன் குறித்த விதவிதமான பாடல்களை ஸ்வரம் தவறாது மிக இனிமையாகப் பாடிக் கொண்டிருந்தாள் பத்து வயது கூட நிரம்பாத ஒரு சிறுமி. பக்கத்திலேயே பெருமை பொங்க நின்றுகொண்டிருந்தனர் அவள் பெற்றோர்.

நேரம் கடந்தது. விட்டலனின் திசையில் மீண்டும் கைகுவித்த பெற்றோர், ''வாம்மா, நம் ஊருக்குக் கிளம்பலாம்'' என்றனர்.

''இதுதான் என் ஊர்'' என்றாள் அந்தச் சிறுமி.

திகைத்த பெற்றோர், குரலில் கொஞ்சம் கண்டிப்பைக் கூட்டினர். ''கிளம்பும்மா. அப்பா அம்மா சொன்னா கேட்கணும்.''

''இதோ என் அப்பா, அம்மா'' என்று விட்டலனைக் காட்டினாள் சிறுமி ஜனாபாய்!




வண்ணப்படம் : வேதா
படங்கள் : ஸ்ரீஹரி

# பூக்கள் குணம் மாறாது!

அந்த மூதாட்டியைப் பார்த்ததும் எனக்கு என் அம்மாவின் ஞாபகம் வந்தது.

நான் நடை பழகத் தொடங்கும் பருவத்திலேயே அவள் இவ்வுலகை விட்டுப் போய்ச் சேர்ந்து விட்டாள். விவரம் தெரிந்து நான் அம்மா என்று அழைத்தது எப்போதும் சிடுசிடுவென்று முகத்தை வைத்திருக்கும் என் சித்தியைத்தான்.

அவருடைய பிள்ளைகளை எனது தம்பி, தங்கைகளாகவே நினைத்து வளர்த்தேன். அப்பா குடிபோதையில் சென்று சாலை விபத்தில் சிக்கி கால் முடமான பிறகு குடும்ப பாரம் முழுவதும் என் தோளின் மீதே வந்து விழுந்தது.



இன்முகத்தோடு ஏற்றுக்கொண்டேன். தம்பி தங்கைகளைப் படிக்க வைத்து, வேலை வாங்கிக் கொடுத்து, அனைவரும் மெச்சும் வண்ணம் நிறைவாக திருமணமும் செய்து வைத்தேன்.

இருந்தும் சித்தியிடமிருந்து அன்பான வார்த்தைகளோ, ஆறுதலான பார்வைகளோ இதுவரை எனக்குக் கிட்டியதே இல்லை.

இப்போது பேருந்திலிருந்து இறங்கும்போது கால் இடறி நான் கீழே விழுந்ததும், சாலையோரம் பூக்கடை வைத்திருந்த இந்த மூதாட்டி ஓடிவந்து என் கைப்பிடித்து தூக்கி நிறுத்தி, ''பாத்து வரக் கூடாதா ராசா'' என்று அன்பொழுகச் சொன்னதும் நான் உருகிப் போனேன்.

அவரது கடைக்கு அழைத்துச் சென்று மர ஸ்டூலில் என்னை உட்கார வைத்து, தண்ணீரை என் காலில் ஊற்றி நீவி விட்டார்.

வறுமைக் கோலத்தில் இருக்கிற அவருக்கு ஏதேனும் செய்யணும் என்ற முனைப்போடு சட்டைப் பையிலிருந்து எடுத்துக் கொடுத்த ஐம்பது ரூபாய் நோட்டை அவர் வாங்கிக் கொள்ளவில்லை.

குட்டை மேஜையின் மீது மழை காகிதத்தை விரித்து வைத்து அதன் மேல் மல்லிகை, முல்லை, கனகாம்பரம், கதம்பம் என பூக்களைப் பந்து பந்தாக சுற்றி வைத்திருப்பதைப் பார்த்தேன்.

எப்போதும் விருப்பத்தோடு தலைநிறைய கனகாம்பரத்தை வைத்துக்கொள்ளும் என் சித்தியின் நினைப்பு வந்தது.

மறுபடியும் பணத்தை அந்த மூதாட்டியிடம் நீட்டியபடியே சொன்னேன்.

''இந்த ரூபாய்க்கு கனகாம்பரப் பூ கொடும்மா.''

- இதயா ஏசுராஜ்

# காட்சி-1

இடம்: கோவை, சிங்காநல்லூரிலுள்ள ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி மகா வித்யாலயா கல்லூரி. சிலுசிலுவென உற்சாகத் தூறலை வான்மேகம் உதிர்க்கும் காலம். இளங்குளிராய் இளசுகள் கல்லூரி வாசலில் கூடி கல்கியை வரவேற்கிற கோலம். எல்லாம் முதல்வர் Dr. சுப்பிரமணியம் ஏற்பாடு.




ஜாலி எலெக்ஷன் விதிமுறைகளை அறிவித்து, "உங்கள் பிரபலத்தை நீங்கள் தேர்ந்தெடுங்கள். இந்த டான்ஸ் போதுமா இன்னும் கொஞ்சம் வேணுமான்னு திக்கி திணறுறமாதிரி கொஞ்சம் ஆடிப்பாடி வேலை செய்யுங்க" என்றதும் விசில் வெள்ளத்தில் துப்பட்டாக்கள் நனைந்தது போல் ஆரவாரம்.



# காட்சி-2

# ஆடவரெல்லாம்...

## காட்சி-4



இது ஜாலிக்காக என்றாலும்... எல்லோர் முகங்களிலும் சீரியஸ்னெஸ்... விலை போகாத ஜனநாயகத்தை விதைக்கிற நடமாக 'தலை'யைத் தேர்ந்தெடுக்கும் தலையாய ஒத்திகையாய்...

# Cங்காரத்துக்கு Dருஷ்டிப் பொட்டு!



## காட்சி-5

(துணை முதல்வர் பிரேமலதா, நூலகர் ரேணுகா முன்னிலையில் தமிழ்த் துறைத் தலைவர் ஜோதிமணி, கவிதையால் செய்த வர்ண வரவேற்பை வாசிக்கிறார்.)

''கனவுகளை விதைக்கிற இரவு வேண்டும்.
வேற்றுமை முளைக்காத இதயம்
வேண்டும்.
அறியாமை விரட்டும் அறிவு வேண்டும்.
அகிலத்தில் நலம் விதைக்கும் அன்பு
வேண்டும்
தேசத்தைத் தாய்மையாய்ப் போற்ற
வேண்டும்.''

## காட்சி-3



# ஆடவரலாம்..!

என்னதான் 'ஆடவரெல்லாம் ஆடவரலாம்'னு பாட்டுப் பாடி அழைத்தாலும், அம்மணியோட பாம்பு டான்ஸைப் பார்த்து பயந்து போயே பசங்க அம்பேல்னு ப்ரைட் கேர்ள்ஸ் பிட்டைப் போட்டனர்.

(சும்மாவா... பாம்புன்னா படையே நடுங்குமே...)

* ஸ்ரீதேவி

**காட்சி-6**

**தமிங்கிலீஷ் கவிதை**

**கவிதையும் காமெடியும்
50 - 50 கலந்த கலாட்டா
ரவுண்ட்-அப்பில்...**

### A To Z

A - ன் வாழ்வினிலே
B - ரகாசிக்க வந்தவளே
C - ங்காரப் பசுமையே உனக்கு
D - ருஷ்டிப் பொட்டு வைக்கட்டுமா?
E - ன்றல்ல, நேற்றல்ல என்றெல்லாம்
F - பொழுதும் உன் நினைவால் என்
G - வன் வாடுதடி
H - சமயம் உன்னைக் கண்டாலும் நான்
I - ஸ் மழையில் நனைகிறேனடி
J - ன்மங்கள் பல எடுத்தாலும் நான்
K - ட்க விரும்புவது உன் குரலைத்தான்
L - ல்லா ராகத்திலும் பாடவேண்டுமா?
M - ம்மாடி "ஆத்தாடி" ஆட வேண்டுமா?
N - ன சொன்னாலும் செய்வேன் உன்
O - ரப் பார்வை தரும் இன்பத்துக்காக
P - ச்சையாக உன் நட்பைக் கேட்டு
Q - வில் நிற்பவர்கள் ஆயிரம்
R - அமுதே நீ
S - என்று சொல்லிவிடு
T - ல்லிக்கே உன்னை நான்
U - வராணி ஆக்குவேன்
V - ரலால் நீ தீண்டினால் போதும்
W - னிட் மின்சாரம் தாக்கும்
X - ரே எடுத்தாலும் அதில் உன் உருவம் தான் ஆசையால்
Y - என்று கேள்வி கேட்காமல்
Z - என்று பதில் சொல்லடி தங்கப்பெண்ணே!

**- என்.ரஞ்சித் குமார்,
இரண்டாம் ஆண்டு பி.பி.எம்.**

**காட்சி-8**



கொஞ்ச நேரம் கோரஸா பாடிக்கிட்டிருந்த வங்களைப் பார்த்து, "ஆளுக்கு ஒரு எசப்பாட்டு எடுத்து விடுங்க" என்று

**காட்சி-7**



- ஷகிலா, உமா மகேஸ்வரி



சிண்டு முடியப் பார்த்தோம். முடியவே முடியாது என ஸ்டெடியாகப் பாடி முடித்தனர் அதே கோரஸை.

**காட்சி-6**

### ஜெயிலுக்குப் போகாமலேயே...

*கம்பி1, கம்பி2, கம்பி3,*
*கம்பி4, கம்பி5*
*எப்படி உன்னை கம்பி எண்ண வைத்தேன் பார்த்தியா?*

என்னதான் பூமி சூரியனைச் சுற்றிச் சுற்றி வந்தாலும் பூமிக்கு சூரியன் pick up ஆகாது.

- எஸ்.சுகன்யா

**காட்சி-6**

### நிழல்

நிலா வரை
சென்றான் மனிதன் -
உன் நிழல் வரை கூட
வர முடியவில்லை
என்னால்!

- சி. ஷோபனா,
இரண்டாம் ஆண்டு,
பி.காம் சி.எஸ்.சி.ஏ

*(நிழல் கவிதை சொன்னவங்க நிழற்படம் எடுக்காதீங்கன்னுட்டாங்க... நிலா இல்லாத வானம் மாதிரி இந்த இடத்துல கவிதை நட்சத்திரம் மட்டும்... ஐயோ போற போக்குல நம்மைக் கவிஞராக்கிடுவாங்களோ?)*



'இருளில் ஒளிரும் இதயம்'
- P.D. அனிஷ்.

**காட்சி-10**

"மக்களுக்கான மகேசன் பணியில் மண்ணில் புதைந்தாலும் புதையலாகத்தான் வெளிப்பட வேண்டும். அந்த 'தில்' இருந்தால்... சொர்க்க இந்தியாவைச் செதுக்கும் உளி நீதான்...!"

- பேச்சுப் போட்டியில்
லாவண்யா

*முதல் கோணல் முற்றும் கோணல்னு அம்மாயி சொல்லும்.*
*அதனால ஃபர்ஸ்ட் லுக்கே பெஸ்ட்டா அமையணும்னா ஆடை பாதி ஆள் பாதி இல்லை ஆடை முக்கால் ஆள் கால -*
*இதுதான் ஜெயிக்கிற ஃபார்முலா*

**காட்சி-9**



## காலேஜ் பிரபலங்கள்

"மாணவிகள் பேராசிரியைகளிடம் சொல்லத் தயங்கும் நிறைய பெர்ஸனலான பிரச்னைகளை, இயலாமையை நான் பாலமாக இருந்து தீர்க்க முயல்வதால்தான் இந்த அழகிய அங்கீகாரம் கிடைத்திருக்கிறது போலும்."



• தெய்வானை

காட்சி-11

"இதுவரைக்கும் எனக்கு எதிரிங்க இல்ல... உண்டியலில் காசு சேர்ப்பது போல நண்பர்களைச் சேர்க்கிறேன். அதன் பிரகாச பிரதிபலிப்புதான் இது."



• ஜி. பிரகாஷ்



காட்சி-12

**ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி மகாவித்யாலயா கல்வி நிறுவனங்களின் தாளாளரும் செயலருமான தனலஷ்மி ஜெயசந்திரன் உரை:**

தொழிற்சாலைகளும் தொழிலாளர்களும் நிறைந்த பகுதி இந்த சிங்காநல்லூர். நடுத்தரக் குடும்பத்துப் பிள்ளைகள் அதிகம் உள்ள இப்பகுதியில், அவர்களின் கல்லூரிக் கனவை நனவாக்க 30 வருடங்களாய் இந்த ஜெயா கல்வி நிறுவனங்களை நடத்தி வருகிறோம். எங்கள் கல்லூரியில் 10 இளங்கலைத் துறைகளும், 5 முதுகலைத் துறைகளும், 3 எம்ஃபில் துறைகளும் உள்ளன. 1,500 மாணவர்கள் படிக்கும் இந் நிறுவனத்தில் பெண்களே அதிகம் என்பது விசேஷமான அம்சம். குறைந்த மதிப்பெண் பெற்றவர்களுக்குக்கூட அவர்கள் விரும்பிய பாடப் பிரிவைக் கொடுத்துக் கைதூக்கி விடுவது எங்கள் தலையாய பணி. இந்தக் கல்லூரியில் ஜெயா அகாடமி என்ற அமைப்பின் மூலம் Information Technology and Management Studies என்ற படிப்பை எடுத்தால், போலந்திலும் ஜெர்மனியிலும் சிறப்புப் பயிற்சி அளிக்கப்படுகிறது. இது எங்கள் கல்லூரியின் சிறப்பு. எங்கள் நிறுவனம் மனிதநேயத்தை முதலீடு செய்து கோவையில் கல்லாமை என்ற நிலை மாற ஆத்ம திருப்தியோடு உழைக்கிறது.

செய்தி, படங்கள் : **ஆர்.பாலா**

நீங்கள் கேட்டவை – ஜாக்

● எல்.மோகனசுந்தரி, கிருஷ்ணகிரி

? தேவையற்ற வழக்குகள் போடப்படுவதைத் தவிர்க்க சட்டம் வரும் என்கிறாரே வீரப்ப மொய்லி?

! தேவையற்ற வழக்கு என்று சட்டத்தினால் தீர்மானிக்க முடியாது. நீதிபதிதான் ஆராய்ந்து பார்த்து இவ்விஷயத்தில் ஒரு முடிவுக்கு வர முடியும். தேவையற்ற வழக்கு என்று தீர்ப்பளித்தால் கூடவே அபராதம் விதிக்கவும் சட்டத்தில் இடமிருக்கிறது. மொய்லியின் அறிவிப்பு ஆபத்தானது. அது அரசியல் ஊழலுக்குப் பாதுகாப்பாகி விடக் கூடாது.

● ரஞ்சனிப்ரியன், பள்ளிபாளையம்

? இந்திய - அமெரிக்க நல்லுறவில் புதிய சகாப்தம் தொடங்கியுள்ளது என்று மும்பையில் ஹிலாரி கிளிண்டன் கூறியுள்ளாரே?

! ஆமாமாம்; இந்தியாவில் எதிர்க்கட்சிகளும் அதையேதான் சொல்கின்றன! அமெரிக்காவின் விருப்பத்துக்கு இந்தியா தலையாட்டும் புதிய சகாப்தம் தொடங்கிவிட்டதாகக் கூறுகின்றன! அமெரிக்க நோக்கில் அது நல்லுறவுதானே!

● எம்.ஏழுமலை, அக்ரஹாரம்

? தீபாவளி ரயில்களின் முன்பதிவு பத்தே நிமிடங்களில் முடிந்ததற்கு, 'ஆன்லைன்' முறைதான் காரணம் என்று வாய்கூசாமல் சொல்லும் அரசியல்வாதிகள், பருப்பு விலை உயர்வுக்கு மட்டும் கண்டும் காணாமல் இருப்பது ஏன்?

! கண்டும் காணாமல் இருந்தால்கூட பரவாயில்லையே; ஆன்லைன் வர்த்தகத்தால் விலை ஏறவில்லை என்று அடித்துவேறு சொல்கிறார்கள்! இந்தப் பருப்பு எத்தனை நாளைக்கு வேகும்?!

● வார்த்தைஜால வரிகள்!



# சமச்சீர் கல்வி சாத்தியமாகுமா?

● என்.சண்முகம், திருவண்ணாமலை

? தன்னுடைய கோபாலபுரம் வீட்டை இலவச மருத்துவமனை அமைப்பதற்காக முதல்வர் வழங்கியுள்ளது பற்றி...?

! அவருடைய ஈகைக் குணம் வரவேற்புக்குரியது. என்ன நிபந்தனைகள் விதித்துள்ளார்

என்பது தெரியவில்லை. வீட்டின் அமைப்புக்கும் மருத்துவ மனையின் தேவைக்கும் நிறைய வித்தியாசங்கள் உண்டு. மேலும், அந்த வட்டாரத்தில் வசிப்போர் மருத்துவ மனை அங்கு அமைவதை வரவேற்க வேண்டும். வருங்கால அரசிடம், மருத்துவ மனை அமைக்க, நிபந்தனையற்ற முறையில் வீட்டையும் மனையையும் ஒப்படைப்பது நல்லது.

● பி.என்.ஜெய்குமார், திருவாரூர்

***? "மும்பையில் தாக்குதல் நடத்தியது எங்கள் நாட்டுத் தீவிரவாதிகள்தான்" என பாகிஸ்தான் அதிகாரபூர்வமாக அறிவித்து விட்டதே?***

! உலக நாடுகள் ஏராளமான அழுத்தம் கொடுத்த பின் இவ்வளவு காலம் சென்று ஒருவழியாக ஒப்புக்கொண்டுள்ளது. குற்றவாளிகள் மீது நடவடிக்கை எடுக்க இன்னும் எவ்வளவு அழுத்தம் தர வேண்டுமோ? பாக். எவ்வளவு கால தாமதம் செய்யுமோ, தெரியவில்லை. தான் உருவாக்கிய பயங்கரவாத பூதத்தின் பிடியில் பாகிஸ்தான் தானே சிக்கித் தவிப்பது நிதர்சனம்.

● இராசக்கரபாணி, மதுரை

***? அ.தி.மு.க., ம.தி.மு.க. மற்றும் பா.ம.க. ஆகிய கட்சிகள், வருகிற சட்டமன்ற இடைத்தேர்தலைப் புறக்கணித்துள்ளது சரியா?***

! இமாலயத் தவறு! இடைத்தேர்தல் என்பது பொதுவாக ஆளுங்கட்சிக்குத்தான் கடுஞ்சோதனையாய் அமையும். அதைப் புரிந்துகொண்டு தகுந்த அணுகுமுறையுடன் பிரசாரம் செய்திருக்க வேண்டும். இப்போது, 'தோல்வி கண்டு பயம்' என்ற அவப்பெயருடன் ஜனநாயகக் கடமையைப் புறக்கணித்த பொல்லாப்பும் சேர்ந்துவிட்டது!



✱ தெரிந்த கொடுமை!

● ஜி.அப்துல்பாரி, பழனி ❒

***? சமச்சீர் கல்வி சாத்தியமாகுமா?***

! சட்டம் நிறைவேற்றி கல்வித் திட்டத்தில் சமச்சீர் முறை கொண்டு வரலாம்; ஆனால், சமச்சீராக எல்லா மாணவர்களுக்கும் அதனை ஏற்கும் ஆற்றலை வழங்க முடியாது. இயற்கையோ, இறைவன் சித்தமோ, அதில் ஏற்றத்தாழ்வுகள் இருக்கவே செய்யும். இதை உணர்ந்தால் சமச்சீர் கல்வி என்பது கல்வியின் தரத்தைக் குறைக்கவே உதவும் என்பது விளங்கும்.

● எச்.மோகன், மன்னார்குடி

***? பா.ஜ.கவைப் பலப்படுத்த மீண்டும் ரத யாத்திரை மேற்கொள்ளப்போவதாக அத்வானி கூறியிருப்பது பற்றி..?***



✱ விபரீத யாத்திரை

! ரதத்தை இழுத்துச் செல்ல வேண்டிய நான்கு குதிரைகள் நாலாபக்கமும் இழுக்க, அத்வானி ஹிந்துத்வா சாட்டையைச் சொடுக்குவதால் ரத யாத்திரை வெற்றி பெறாது! முதலில் கட்சிக்குள் ஒற்றுமை உருவாக, கொள்கைச் சீரமைப்பு தேவை.

● ஜி.கீர்த்தனா, நெய்வேலி

***? திருப்பதி ஏழுமலையானைச் சுலபமாகத் தரிசிக்கக் கைக் குழந்தைகளை, ரூ.200 முதல் ரூ.500 வரை கொடுத்து வாடகைக்கு எடுக்கிறார்***



✱ அபாய திருத்தம்!

★ ரூ.75/- பரிசு பெறுபவர் : கல்யாணி பாலு, புதுக்கோட்டை



★ ஈகை அறிவிப்பு!

...ளாமே பெண்கள்?

! கோயில் நிர்வாகத்தை ஏமாற்ற முடியுமென்றாலும் ஏழுமலையானை ஏமாற்ற முடியாது. ஜருகண்டி தரிசனம் கிட்டலாம்; பிரார்த்தனைக்குப் பலன் கிடைக்காது.

● உமரி பொ.கணேசன், மும்பை

*? தனியார் பால் பண்ணைகள் லாபகரமாக இயங்கும்போது அரசு நிறுவனம் மட்டும் நஷ்டத்தில் இயங்கக் காரணம்...?*

! அரசு ஈடுபடும் தொழிலும் வியாபாரமும் மக்களுக்கு சேவை செய்யும் எண்ணத்தில் நடப்பதால் லாப நோக்கு முக்கியத்துவம் பெறாது. ஆனால், நஷ்டம் உண்டாகாமல் தவிர்க்க முடியும். இதற்குத் தடங்கலாக இருப்பது, அரசு என்ற சொல்லுக்கே ஊழல் என்ற அர்த்தம் உருவாகிவிட்டிருப்பதுதான்!

● எஸ்.அமிர்தா, சென்னை-26

*? திரைப்பாடல்களின் அர்த்தம் புரிவதில்லை; உச்சரிப்பில் தெளிவு இல்லை. படம் ஓடுகிறபோது, பாடல் காட்சிகளில் ஃப்ளாஷ் நியூஸ் போல் வரிகளின் எழுத்து வடிவத்தைப் போடலாமே?*

! ஐடியா ஐய்யாசாமி! 'அன்பே டோரா' போன்று வருகிற சராசரி வார்த்தை ஜாலங்களைப் புரிஞ்சு (தெரிஞ்சு) கேட்டா என்ன? புரியாம கேட்டா என்ன? ஒரு வித்தியாசமும் இராது!

● ச.நாகரத்தினம், திருப்பூர்

*? டாஸ்மாக் ஊழியர்கள் தினமும் பல நூறு ரூபாய்கள் கிம்பளமாக அடிப்பது மு.க.ஸ்டாலினுக்குத் தெரியுமா? (எ.கா : குவார்ட்டர் விலை ரூ.58; விற்பது ரூ.60க்கு...)*

! அது தெரியாவிட்டாலும் டாஸ்மாக் கடைகளால் நாள்தோறும் பல நூறு மக்கள் கெட்டழிவது நிச்சயம் தெரிந்திருக்க வேண்டும். இந்தக் கொடுமையை மக்கள் நலன் காக்க வேண்டிய அரசே நடத்திக் கொண்டிருக்கிறது என்பது சர்வ நிச்சயமாகத் தெரிந்திருக்க வேண்டும்.

● கல்யாணி பாலு, புதுக்கோட்டை ★

*? ''உயர்நீதிமன்றத்தில் தமிழை வழக்குமொழி ஆக்குவது எளிதல்ல'' என மத்திய சட்ட அமைச்சர் கூறியிருப்பது குறித்து கருணாநிதி என்ன நினைப்பார்?*

! கருணாநிதி என்ன நினைப்பார் என்பது முக்கியமல்ல. நாட்டுக்கு எது நல்லது என்பதே முக்கியம். கீழ் கோர்ட்டுகளில் பிரதேச மொழியில் வழக்குரைக்கப்படலாம்; அது குற்றவாளிக்கும் உதவும். ஆனால், உயர்நீதிமன்றம், சிறப்பு நீதிமன்றம் ஆகியவற்றில் பெரும்பாலும் சட்ட பாயின்டுகளே அலசப்படும் என்பதால் அங்கெல்லாம் ஆங்கிலம் தொடர்வதே நல்லது. சட்டக் கல்லூரிகளும் இதற்கேற்ப பாடத் திட்டங்களை வகுக்க வேண்டும்.



# ஒற்றை ஊசி

''இந்த உலகில் வாழக்கூடிய அத்தனை உயிரினங்களும் பஞ்ச பூத சக்திகளின் சரிவிகிதக் கலவை தான். ஒருவருடைய உடல் வளர்ச்சிக்கும் நலத்துக்கும் வீழ்ச்சிக்கும் இந்தப் பஞ்சபூத சக்திகளே காரணம். அவை சரிவிகிதத்தில் உடலுக்குக் கிடைக்கக்கூடிய வகையில் உடலை நிர்வகிக்கத் தெரிந்தாலே போதும்; நலத்தோடு வாழலாம். இதில் ஏதாவது சிக்கல் ஏற்படும்போது தொந்தரவும், அதனைப் போக்க சிகிச்சைகளும் தேவைப்படுகின்றன'' என்கிறார் தி.நகர் சந்தோஷ் மருத்துவமனையின் அக்குபஞ்சர் மருத்துவ நிபுணர் உமா வெங்கடேஷ்.




''நம் உடலுக்கு பஞ்சபூத சக்திகளைக் கடத்துகிற உயிர் சக்தி பாதைகள் இருக்கின்றன. இவை பெரும்பாலும் நகக் கணுக்கள், விரல்கள், மூட்டுப்பகுதி, தோள்... போன்றவற்றில் அதிகம் காணப்படுகின்றன. இவற்றில் அடைப்பு ஏற்பட்டாலோ அல்லது ஐந்து சக்திகளில் ஏதாவது ஒன்று இம்பேலன்ஸ் ஆனாலோ தொந்தரவு தொடங்குகிறது. இதனை பக்கவிளைவுகள் ஏதுமற்ற (ஒற்றை ஊசி மூலம் செய்யப்படும்) அக்குபஞ்சர் சிகிச்சை மூலம் முற்றிலும் குணப்படுத்த முடியும்'' என்றவரிடம், ''ஏன் அடைப்புகள் ஏற்படுகின்றன?'' என்று கேட்டால், ''மனிதனின் உணவு மற்றும் இதர பழக்கங்கள்தான் காரணம்'' என்கிறார்.

''இதயத்தோடு சம்பந்தப்பட்ட 'நெருப்பு' சக்தி சமச்சீரற்ற முறையில் உடலுக்குக் கிடைத்தால், இதயம் சம்பந்தமான நோய்கள் வரும். புகைப்பழக்கமுள்ள பெரும்பாலோர்க்கு நெருப்பு சக்தியின் இம்பேலன்ஸினால் இதயம் தொடர்பான பெருந் தொந்தரவுகள் வருகின்றன. 'நிலம்' சக்தி, வயிறு- மண்ணீரலோடு சம்பந்தப்பட்டது. 'காற்று' சக்தியின் சர்க்குலேஷனில் தடுமாற்றம் ஏற்பட்டால், நுரையீரல் சம்பந்தமான ஆஸ்துமா, வீஸிங் போன்றவை உண்டாகின்றன. 'நீர்' சக்தியின் கட்டுப்பாட்டில் இயங்கும் சிறுநீரகங்களின் உயிர்சக்தி பாதையில் அடைப்புகள் ஏற்படும்போது ஆரம்பக்கட்டத்தில் அவ்வளவாகத் தெரியாது. உன்னிப்பாகப் பார்க்கிறபோதுதான் ஆபத்தான மாற்றம் தெரியும். 'ஆகாயம்' சக்தியோடு (இந்தச் சக்தியை சீனாவில் 'மரம்' சக்தி (wood element) என்பார்கள்) தொடர்புடைய கல்லீரல், கணையம், சுரப்பிகள் போன்றவை கண்ணுக்குத் தெரியாத உறுப்புகள் என்பதால் மாற்றங்களும் கொஞ்ச நாள் கழித்துத்தான் தெரியவரும். இவை அனைத்தையும்



# சிகிச்சை!

மருந்து மாத்திரைகள், அறுவை சிகிச்சையின்றி (ஒற்றை ஊசி மூலம் செய்யப்படும்) அக்குபஞ்சர் சிகிச்சை கொண்டு குணப்படுத்த முடியும்'' என்கிறார் உமா வெங்கடேஷ்.

''பஞ்சபூத சக்திகளுக்கு ஒன்றோடு ஒன்று தொடர்பிருப்பது போல, உடலிலுள்ள சக்திகளுக்கும் ஒன்றோடொன்று தொடர்பு உண்டு. 'நெருப்பு' சக்தி குறைபாட்டோடு தொடர்புடைய புகைக்கும் பழக்கம் உடையவருக்கு, கண்டிப்பாக 'நிலம்' சக்தியோடு தொடர்புடைய கல்லீரலைப் பாதிக்கும் 'மது' அருந்தும் பழக்கமும் இருக்கும்'' என்கிறார்.

''ஒருவருக்கு இந்தச் சக்தி குறைந்திருக்கிறது என்பதை எப்படிக் கண்டுபிடிப்பீர்கள்?''

''நாடி பிடித்துத்தான். அதில் அவருக்கு எந்தச் சக்தி குறைபாடுள்ளது எனத் தெரிந்துவிடும். அதை வைத்தே அவருடைய கேரக்டரையும் கணித்துவிட முடியும்''

''எப்படி?''

'' 'நிலம்' சக்தி இம்பேலன்ஸாக இருந்தால் எப்போதும் பதற்றப்படுவார்கள், ரிஸ்க் எடுக்க மாட்டார்கள். காற்று சக்தியின் சர்க்குலேஷனில் குறைபாடு இருந்தால் விரக்தியாகப் பேசுவாங்க. நீர் சக்தி குறைபாடு உள்ளவங்க, ரொம்பத் தாழ்த்திக்குவாங்க. நெருப்பு சக்தி குறைபாடு இருந்தா வாழ்க்கையில் முன்னேறணும்னு எண்ணம் இருக்கும். எப்படிச் செயல்படுத்தறதுன்னு தெரியாது. ஆகாயம் சக்தி தட்டுப்பாடு இருந்தால், மனசுல நம்பிக்கை இருக்கும். ஆனால் அதைக் காரியத்துல காட்ட மாட்டாங்க'' என்கிறார்.

''ஏதாவது ஒரு சக்தி சமச்சீரா கிடைச்சா என்னாகும்?''

''உதாரணமா ஆகாயம் சக்தி சமச்சீரா கிடைச்சா புத்திக்கூர்மை அதிகமாகும். கிரியேட்டிவ் சக்தி உயரும். துரிதமா அதே நேரத்துல நல்ல முடிவா எடுப்பாங்க. மன அழுத்தம் குறைஞ்சு எப்போதுமே மனசுக்குள்ள ஒருவிதமான மகிழ்ச்சி மையமிடும்'' எனச் சிரிக்கிறார் டாக்டர் உமா வெங்கடேஷ்.

**- மகிமைராஜன்**

அவையெல்லாம் என் முன்னோர்களின் அறிவு தானம். நான் என்பது எனது நம்பிக்கை, ஆசை எல்லாம் சேர்ந்தது தானே? அதனாலதான் அதை யும் சேர்த்துச் சொன்னேன்.''

**நீங்க என்ன படிச்சிருக்**



**முறையாக ஓவியம் படித்தவரில்லை... எந்தக் கண்காட்சிகளும் நடத்தியதில்லை... பத்திரிகை வெளிச்சம் பாய்ந்ததில்லை. ஒரு குக்கிராமத்தில் அமர்ந்தபடி தம் தூரிகையால் பேசிக் கொண்டிருக்கிறார் ஆர்.வரதராஜன். அவரைச் சந்தித்தபோது...**



**ஸார்! உங்களைப் பற்றி கொஞ்சம் சொல்லுங்களேன்...**

''நான் ரிஷப ராசிக்காரன். கோவை காரமடைப் பக்கத்துல திம்மம்பாளையம் கிராமத்தைச் சேர்ந்தவன்.''

**எல்லாம் சரி. அது என்ன ரிஷப ராசிக் காரன்னு?**

''ஜோதிடம், சாஸ்திரங்கள் எல்லாத்தி லேயும் எனக்கு நம்பிக்கையுண்டு.

**கீங்க? ஓவியம் சோறு போடுதா?**

''நான் பி.காம் பட்டதாரி. சின்ன வயசுலேர்ந்து ஓவிய ஈடுபாடு; இல்ல இல்ல வெறி. அதனால சுயமா நானே ஓவியம் கத்துக்கிட்டேன் - சித்திரமும் கைப்பழக்கம் மாதிரி. இப்போ ஓவிய ஆசிரியரா இருக்கேன். முறையா ஓவியம் படிக்கல...ம்ம்...''

**ஏனிந்த ஏக்கப் பெருமூச்சு? கலைக்கு**





# ஓவிய யாத்திரை!



**முறையான படிப்பு அவசியமா என்ன?**

''ஏற்கெனவே போட்டு வெச்சருக்கிற பாதையில வேகமா சுலபமா போயிடலாம்; முறையான படிப்பு அது போலதான். காட்டுக்குள்ள நமக்கான ஒற்றையடிப் பாதையை நம்ம பாதத்தால நடந்து நடந்து நாமே போடறது கஷ்டமும் கால தாமதமும் இல்லையா? அது போலதான் சுயமான வெளிப்பாடு.''

**எதுக்கு வரையணும்? அப்படி என்ன சந்தோஷம் வரையறதுல?**

''இயற்கையில இயைந்திருக்கும் இறைத்தன்மையை நான் உணர்ந்துட்டேன். நான் உணர்ந்ததை பத்தவங்ககிட்ட சொல்ற எனக்கான பாஷைதான் இந்த ஓவியம். கடவுளைக் கண்டுபிடிப்பவன் பாக்யவான்தான். நீங்களும் கண்டுபிடிக்கலாம்தானே!''

**எந்த இஸம் (ரியலிசம், சர்ரியலிசம், இம்ப்ரஷனிசம்...) உங்களை ஈர்த்தது?**

''இஸம் பத்திய அறிவை ஓவியத்தில் திணிக்க வேண்டியது இல்லை. நான் யாத்திரிகனைப்போல. பெரிய திட்டமிடல் ஏதுமில்லை.''

**உங்கள் இலக்கு?**

''இன்னும் இன்னும் கற்றுக் கொள்வதுதான். இப்போது என் வயது வெறும் ஐம்பத்து இரண்டுதான்.''

* ஆர்.வரதராஜன்



செய்தி : **அமிர்தா**

படங்கள் : **சின்னராஜ்**

''அரசியல் கட்சி என்றால், இது போன்ற சோதனைகளைச் சந்தித்தே தீர வேண்டும், முக்கிய எதிர்க்கட்சியாக இருந்து கொண்டு தேர்தலைப் புறக் கணிப்பது கொஞ்சமும் சரியல்ல'' என்ற வாறு பிரசாரத்துக்குக் கிளம்பிவிட்டார் கருணாநிதி.

எப்போது?

1991ல் சட்டமன்றத் தேர்தலுக்கு முன், ராஜீவ் காந்தி படுகொலை செய்யப்பட் டார். அதற்கு தி.மு.க.தான் காரணம் என்று வாழப்பாடி ராமமூர்த்தி அறிக்கை விட



# இடைத்தேர்தல்

# புறக்கணித்த ஜெ...



தமிழகமெங்கும் தி.மு.க.வினர் தாக்கப்பட் டனர்; வீடுகள் எரிக்கப்பட்டன; கொடிக் கம்பங்கள் வெட்டிச் சாய்க்கப்பட்டன. தேர்தலில் நிச்சயம் தோல்வி என்று உணர்ந்த தி.மு.க. வேட்பாளர்களும் முக்கியப் பிர முகர்களும் கருணாநிதியைச் சந்தித்து தேர் தலைப் புறக்கணித்து விடுவோம் என்று வேண்டுகோள் வைத்தனரே அப்போது.

அந்தத் தேர்தலில் தி.மு.க. படுதோல்வி அடைந்தது என்பது தனிக்கதை. இச் சம்பவத்தை நமக்குச் சொன்ன முக்கிய தி.மு.க. பிரமுகர், ''இடைத் தேர்தலை ஜெ. புறக்கணிப்பதால் அவருக்குத்தான் நஷ்டம். முடிவைப் பற்றிக் கவலைப்படாமல் பிரசாரத்தில் அவர் இறங்கினால் தமது கருத்துகளை மக்களிடம் கொண்டு சேர்க்க முடியும். எதிர்க்கட்சியாக இருப்பதால் மீடியாவும் அதற்கு முக்கியத்துவம் கொடுக் கும். இந்த வாய்ப்பை நழுவ விட்டுவிட் டார் ஜெ'' என்கிறார் அந்தப் பிரமுகர்.

''ஜெ. புறக்கணிப்பு கட்சியின் செயல் பாட்டைப் பின்னணிக்குக் கொண்டு செல் லும். தொண்டர்களைச் சோர்வடையச் செய்யும். விளைவு, அவர்கள் தே.மு.தி.க. வுக்குச் செல்ல வாய்ப்பிருக்கிறது'' என்று அ.தி.மு.க. சீனியர் பிரமுகர்களே பயந்து போயிருக்கிறார்கள்.

''இப்போதைய சூழலில் 'திருமங்கலம் பாணி' தேர்தலை எங்களால் எதிர்கொள்ள முடியாது. தி.மு.க.வினர் செலவழிப்பதில்

பாதியாவது நாங்கள் செலவழிக்க வேண்டியிருக்கும். இறுதியில் தோல்வி என்றால் அப்போதுதான் தொண்டர்கள் சோர்வடைவார்கள். புறக்கணிப்பு என்று முன்பே முடிவெடுத்து விட்டதால் தொண்டர்கள் மன அழுத்தமின்றி இருக்கிறார்கள். இரட்டை இலைக்கு வோட்டுப் போட்ட கை வேறெதற்கும் வோட்டுப் போடாது. ஆனால் அம்மா எல்லாத் தோழமைக் கட்சியினரோடும் முதலிலேயே பேசி, புறக்கணிப்பு முடிவை எடுத்திருந்தால் தேசிய அளவில் தி.மு.க.வின் அக்கிரமச் செயல்பாடுகளைக் கொண்டு சென்றிருக்கலாம்'' என்கிறார் கொடநாட்டில் அம்மாவைச் சந்தித்துத் திரும்பியிருக்கும் அ.தி.மு.க. முக்கியப் பிரமுகர்.

# புயலாக விஜயகாந்த்!





டி.கே.ரங்கராஜன்

இடதும் வலதும் இணைந்து அம்மாவுக்கு குட்பை சொல்லி விட்டார்கள்.

''முறிவு, பிரிவு என்று சொல்லிக் கொள்வதெல்லாம் உங்கள் இஷ்டம். தேர்தலின் போது தொகுதி உடன்பாடு செய்து கொண்டோம். இனி எங்கள் இயக்கச் செயல்பாடுகளைப் பார்க்க வேண்டாமா? தேர்தலில் பங்குகொள்வதன் மூலம் பிரச்னைகளைப் பரவலாக மக்களிடம் எடுத்துச் சொல்ல முடியும். பொதுவான பிரச்னைகளில் அ.தி.மு.க.வோடு இணைந்து போராட நாங்கள் எப்போதும் தயாராக இருக்கிறோம். காங்கிரஸ், பா.ஜ.க., அதன் கூட்டணிக் கட்சிகளைத் தவிர யாருடன் வேண்டுமானாலும் நாங்கள் தொகுதி உடன்பாடு செய்துகொள்வோம்'' என்கிறார் சி.பி.எம். நாடாளுமன்ற உறுப்பினர் டி.கே. ரங்கராஜன்.

''2011 சட்டமன்றத் தேர்தலுக்கு முன்பாக இந்த இடைத்தேர்தலில் தே.மு.தி.க.வோடு கூட்டுச் சேர்ந்து கொண்டு தி.மு.க.வுக்குக் கடுமையான சவாலை ஏற்படுத்தியிருக்க வேண்டும்'' என்றும் அ.தி.மு.க. பிரமுகர்கள் சொல்கிறார்கள்.

''அப்படிச் செயல்பட்டிருந்தால் அதிரடி ஆட்டம் ஆடக் காத்திருக்கும், அழகிரியின் மத்திய அமைச்சர் பதவியைக் கூட ஆட்டம் காண வைத்திருக்கலாம்'' என்கின்றனர் அவர்கள். தி.மு.க.வை எதிர்த்து தே.மு.தி.க. புயலாகக் களத்தில் குதித்திருக்கிறது. காங்கிரஸ் போட்டியிடும் தொண்டாமுத்தூர், ஸ்ரீவைகுண்டம் தொகுதிகளில் 'ஸ்ருதி'யைக் குறைத்துக் கொண்டு காங்கிரஸுக்குக் கடுமையான சவாலை உண்டு பண்ணும் எண்ணமும் தி.மு.க. தலைமையிடம் இருக்கிறது. எனவே, தே.மு.தி.க. வெற்றி பெற்றால் அ.தி.மு.க.வை முந்திக் கொண்டு தி.மு.க.வின் நேர் எதிரியாக அது வர வாய்ப்பிருக்கிறது. அந்த நிலைப்பாட்டைச் சமாளிப்பது சுலபம்'' என்கின்றனர் தி.மு.க.வினர்! பிரசாரத்தின் போது ஐந்து தொகுதிகளிலும் அ.தி.மு.க. கட்டமைப்பைக் காலி செய்வதே தி.மு.க.வின் முக்கிய அஜெண்டா.

- ப்ரியன்

**பொ**துவாக எல்லா இதழ்களும் வேலூரில் விழா நடத்துவார்கள் - திருவண்ணாமலை பக்கமே வரமாட்டார்கள். திருவண்ணாமலை மாவட்டத்துக்கு அங்கிகாரம் கொடுத்து இருக்கும் 'கல்கி'க்கு மனம் நிறைய வாழ்த்து!

**- உமாதேவி பலராமன், திருவண்ணாமலை**

**க்**ரைம்.காமில் ஒவ்வொரு வாரமும் போட்டி வைத்து, விடையை எழுத வைப்பது சிந்தனைப் பயிற்சி!

**- ஆர்.பிருந்தா ரமணி, மதுரை**

'**சி**ரிக்க வைக்கறது யாரு!' காலேஜ் பட்டிமன்ற கலாட்டாவுக்குத் தீர்ப்பு - ஆண் சிரிக்க வைத்தாலே அழகு. ஆனால், பெண் சிரித்தாலே அழகு. சபாஷ்!

**- மல்லிகா அன்பழகன், சென்னை - 78**

**க**ல்கி ஆண்டு மலர் வாசிக்கையில் மனமெல்லாம் சந்தோஷ மலர்கள் மலர்ந்து சிலிர்ப்பூட்டுவதாக இருந்தன!

**- ஜி.மாரியப்பன், சின்னமனூர்**

**இ**யக்குநரும் நடிகருமான சுந்தர் சி. பேட்டி நச்!

**- ஏ.பி.எஸ்.ரவீந்திரன், வள்ளியூர்**

'**ச**ங்கராபுரம்' முதல் இதழிலேயே மகா பெரியவரின் அருள் மழை. இனி வாராவாரம் வாசகர்களுக்கு ஆன்மிக ஆனந்தக் குளியல்தான்!

**- பி.ஆர்.மயிலப்பன், ஈரோடு**

**ம**றைந்த டி.கே.ப(ா)ட்டம்மாளின் இரண்டு புகைப்படங்கள் முதுமைக்கும் அழகுண்டு என்று நிரூபித்தன. தமிழ்க் கலாசாரத்தின் அடையாளமாகத் திகழ்ந்தன.

**- அ.யாழினி பர்வதம், சென்னை - 78**

# தடையில்லா



''வாழ்க சுறுசுறுப்பு; வளர்க வெளி நடப்பு!'' தலையங்கத்தைப் படித்தவுடன் சபாஷ் போடத் தோன்றியது. தவறுகள் செய்யும் ஆளுங்கட்சிக்கும் அதைச் சுட்டிக் காட்டாமல் வெளிநடப்பு செய்யும் எதிர்க் கட்சிகளுக்கும்... கல்கி வைத்த குட்டு சூப்பர்!

- ஆர்.ராமசுப்ரமணியன், திருவாரூர்

பட்டிதொட்டி வீராங்கனையின் டபுள் ஸ்ட்ராங் கமெண்ட் சூப்பரோ சூப்பர். இதோடு நிறுத்தாமல் வரும் எல்லா வாரங்களிலும் தொடரலாமே!

- கே.வி.நரசிம்மன், ஈரோடு

'சச்சு, காமெடியின் அச்சு'!

- கே.வி.ராமன், சென்னை - 73

எங்கள் மனத்தைக் கொள்ளையடித்த

# ஓட்டம்!

ஜுஜுஸ் பொம்மைகளாக நடித்தவர்கள் உண்மையான மனிதர்களா, அதிலும் பெண்களே அதிகமா? அசந்தே போனேன் ஸார்!

- மு.மதிவாணன், அரூர்

கு.ஞானசம்பந்தன் சிரிக்க வைப்பது மட்டுமில்லாமல் கொஞ்சம் சிந்திக்கவும் வைக்கிறார்.

- எஸ்.கோபாலன், நங்கநல்லூர்

இப்படி ஒரு அதிரடி ஹாஸ்ய இதழைக் கொடுத்து எங்களைச் சிரிப்புக் கடலில் மூழ்கடித்து விட்டீர்! இதய பலவீனமானவர்கள் மகிழ்ச்சிப் பூரிப்பில் ஹார்ட் அட்டாக் வராமல் தப்பிப்பது

# வட்டமேஜை

**துப்பறிய வாங்க போட்டி - 4 முடிவு**

சரியான விடை எழுதியவர்களில் குலுக்கல் மூலம் ரூ.200/- பரிசு பெறும் ஐந்து பேர்...

1. இ.தங்கமணி - நாமக்கல்
2. எஸ்.வி.பார்த்தசாரதி - திருச்சி-5
3. ஆர்.ரேவதி - தஞ்சாவூர்
4. ஆர்.ஜெயபாரதி - விருதுநகர்
5. எ.ஸ்ரீகணேஷ் - ஆரணி

கொஞ்சம் சிரமம்தான். இதுவரை ஏதாவது தகவல் வந்ததா உமக்கு?

- நாகை சந்திரா, நாகப்பட்டினம்

'சிட்டி பாபு' பெயர்க்காரணமே வித்தியாசமாக இருந்தது.

- என்.பாலகிருஷ்ணன், மதுரை

'கிரேஸியைக் கேளுங்கள்' எப்பொழுதுமே செம சிரிப்புத்தான். நோ

'சின்னஞ்சிறு தீவு ஒண்டு' படித்து சில மணித்துளிகள் அப்படியே மெய் மறந்து அமர்ந்திருந்தேன். இலங்கைத் தமிழை மிக இதமாகக் கையாண்டிருக்கிறார் கோரி. தடையில்லா ஓட்டம்!

- ராணிமைந்தன், சென்னை-82

டவுட்! ஆனால் இவ்வாரம் நகைச்சுவை ஸ்பெஷல் என்பதாலோ என்னமோ அத்தனை பதில்களும் படா தூள்!

-சி.கஸ்தூரிரத்னம், சென்னை

# சரிகமப... ரசிக்கலாம் வா!





● டி.எம்.கிருஷ்ணா, பாம்பே ஜெயஸ்ரீ

இளைய தலைமுறைக் கலைஞர்கள் மற்றும் ரசிகர்களுக்கோர் நற்செய்தி! உங்களுக்கே உங்களுக்காக, கல்லூரி வளாகத்துக்கே வந்து பெரிய பெரிய இசை, நடனக் கலைஞர்கள் கச்சேரிகள் செய்யப்போகிறார்கள்! லெக்சர் டெமோக்கள் அளிக்கப் போகிறார்கள்! உங்களுக்கும் நிகழ்ச்சிகள் வழங்க வாய்ப்பளிக்கப்போகிறார்கள்!

## எங்கே? எப்போ?

ஆகஸ்ட் நாலாம் தேதி முதல் ஒன்பதாம் தேதி வரை. கலாக்ஷேத்ரா (ஆக. 4, 5): அடையாறு அரசு இசைக் கல்லூரி (ஆக. 6,7); மியூசிக் அகாடமியின் இசைப் பயிற்சிக் கல்லூரி (ஆக. 8, 9.)

ஸ்வானுபவா என்ற பெயரில் நடக்கும் இந்த 'இளைஞர் இசைத் திருவிழா'வை கடந்த ஆண்டும் இதேபோல ஆகஸ்ட் மாதத்தில் இதே இடங்களில் நடத்திய போது மிக நல்ல ரெஸ்பான்ஸ்.

## அதென்ன ஸ்வானுபவா?

ஒவ்வொரு பெரிய கலைஞரும் தம்முடைய படைப்பின் மூலமாகப் பெறக்கூடிய சுகமான அனுபவத்தை இங்கு இசை விழாவுக்கு வரும் இளைய தலைமுறையினரோடு பகிர்ந்துகொண்டு அவர்களோடு சேர்ந்து இசை, கலை, நாட்டியத்தை வளர்க்கும் நோக்கத்துடன்தான் இந்தப் பெயர் வைக்கப்பட்டுள்ளது.

## எங்கே இருந்தெல்லாம் ரசிகர்கள் வருகிறார்கள்?

இந்த இசை விழாவுக்கென்றே தொடங்கப்பட்ட www.svanubhava.com என்ற இணைய தளத்தில் க்யூ கட்டி முன் பதிவு செய்துவிட்டு வந்து குவிந்த நூற்றுக்கணக்கான இசை, நாட்டிய மாணவிகளும் உண்டு. பதிவு செய்யாமல் நேரடியாக ஸ்பாட்டுக்கே வந்து கேட் கிராஷ் செய்து ரசித்தவர்களும் பலர்.

''சென்னை மட்டுமின்றி பெங்களூரு, ஹைதராபாத், மும்பை, டெல்லி, கொல்கத்தாவிலிருந்து மட்டுமில்லாமல், அமெரிக்காவிலிருந்துகூட ரசிகர்கள் வந்திருந்தார்கள். இந்த வருட ஆன் லைன் பதிவு



முன்னூறைத் தாண்டிவிட்டது'' என்கிறார் இசை விழாவை ஒருங்கிணைத்து நடத்தும் ஒய்.ஏ.சி.எம். (Youth Association for Classical Music) அமைப்பின் துணைத் தலைவரான எத்திராஜ்.

## ஆன் லைன் ஐடியாஸ்?

ஒய்.ஏ.சி.எம். அமைப்பு இருபத்து நான்கு ஆண்டுகளுக்கு முன் விஜய் சிவா, சஞ்சய் சுப்ரமணியம், உன்னிகிருஷ்ணன், டி.எம்.கிருஷ்ணா, பாம்பே ஜெயஸ்ரீ, சௌம்யா என்று அன்றைய இளம் கர்நாடக இசைக் கலைஞர்களால் தொடங்கி வளர்க்கப்பட்டது.

இப்போது பாம்பே ஜெயஸ்ரீ, டி.எம். கிருஷ்ணா இணைந்து தொடங்கியுள்ள 'மாத்ருகா' என்ற அமைப்புடன் இணைந்து ஸ்வானுபவா நிகழ்ச்சியை நடத்துகிறது. சென்ற ஆண்டு இளைஞர்களிடமிருந்தே ஐடியாக்களைப் பெற்று ஸ்வானுபவா நிகழ்ச்சியைப் பெரும் வெற்றி பெறச் செய்தார்கள். இந்த வருடமும் ஏகப்பட்ட

★ சென்ற ஆண்டு நிகழ்ச்சியில்...

ஐடியாக்கள் குவிந்துவிட்டன. அவற்றின் அடிப்படையில் இந்த வருடத்து நிகழ்ச்சிகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

## சென்ற வருட சுவாரஸ்யத் துளிகள்...

இப்போதைய ஒய்.ஏ.சி.எம். நிர்வாகக் குழுவினர் சொன்னவை:

★ வைரஸ் ஜுரம் தாக்கி, டாக்டர் ரெஸ்ட் எடுக்கச் சொல்லி இருந்த போதிலும், ''பாவம்! குழந்தைகள் ஏமாந்துடக்கூடாது!'' என்று முழுசாக இரண்டரை மணி நேரம் கச்சேரி செய்து, கேள்விகளுக்கு விளக்கங்கள் கொடுத்ததுடன் அன்போடு சலிக்காமல் ஆட்டோகிராஃப்கள் போட்டுக் கொடுத்தார் மதுரை டி.என்.சேஷகோபாலன்.

★ கலாக்ஷேத்ரா கச்சேரியில், மைசூர் வாசுதேவாச்சாரியாரின் கீர்த்தனையைப் பாடி முடித்து, ''அவருக்கும், கச்சேரி நடக்கும் இந்த இடத்துக்கும் ஒரு சம்பந்தம்

இருக்கிறது. அது என்ன?'' என்று கேள்வி கேட்டு, ''அவர் கலாக்ஷேத்ராவில் பணி யாற்றி இருக்கிறார்'' என்று விடை யளித்தார்.

**பொ**டிசுகள் தொடங்கி பலரும் வானவில்லாக கேள்விகள் கேட்டு அசத்தி விட்டார்கள். ''மியூஸிக் கற்றுக் கொள்கிற வர்கள் ஆரம்பத்துல எப்படி பிராக்டீஸ் பண்ணணும்?'' என்று செளம்யாவிடம்

* ஒய்.ஏ.சி.எம். குழுவினர்

* அரிய படங்கள் கண்காட்சி

கேட்டபோது,

''ஒரு ராகத்தை - உதாரணமாக சங்கரா பரணம் எடுத்துண்டா, அகார சாதகத்துல அதுலயே வர்ணம், கீர்த்தனைனு பாடணும். சும்மா வார்த்தைகள் மட்டு மில்லாம அதை ஒரு தியானம் மாதிரிதான் பண்ணணும். குருவிடம் குதர்க்கமாகக் கேள்வி கேட்காம அப்படியே அவர் சொல்றதை ஃபாலோ பண்ணினாலே நல்ல சங்கீதம் வரும் என்றார்!''

நாட்டியம் கற்றுக் கொள்ள வயது வரம்பு உண்டா?

''கலாக்ஷேத்ராவின் ருக்மிணி தேவியே முப்பது வயசுலதான் கத்துக்க ஆரம்பிச் சார்'' என்று ஒரு போடு போட்டார் கலாநிதி நாராயணன்.

ஒரு கச்சேரியை எப்படிக் கேட்க வேண்டும்; அதில் எந்தெந்த விஷயங்களை எப்படி ரசிக்க வேண்டும் என்றெல்லாம் சொல்லிக் கொடுத்தது ரொம் பவும் யூஸ்ஃபுல்.

செம்பை வைத்யநாத பாக வதர், எம்.டி.ராமநாதன், எம்.எல்.வி., பிருந்தா-முக்தா ஆகியோர் பற்றிய ஆவணப் படங்களைத் திரையிட்டு, இளைய தலைமுறையினருக்குத் தெரியாத பல ரசமான தகவல் களைத் தெரியப்படுத்திய முயற்சி பாராட்டுக்குரியது.

தேநீர் இடைவேளைகளில் டீ கொடுத்த வாலண்டியர்கள்கூட ஆலாபனை செய்து கொண்டே தான் டீ கொடுத்தனர்!

## இந்த வருடம் என்ன ஸ்பெஷல்?

நாட்டியமும் நாதஸ்வர இசையும் இடம் பெறுவதுடன் பள்ளி / கல்லூரி மாணவர்களின் சேர்ந்திசைக்கும் நேரம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. ஒரு ஸ்டார் சிங்கர்ஸ் பட்டாளமே சுவானுபவாவைத் தூக்கி நிறுத்தப்போகிறது! கல்கியும் கைகோக்கப் போகிறது! கேட்பானேன் கொண்டாட்டத்துக்கு!

- எஸ்.சந்திரமெளலி

Matrka and YACM welcomes you all to

# Svanubhava

A festival exclusively for all students of Classical Music and Dance

**Date: 4th to 9th of August, 2009**
**Venues: Kalakshetra, Tamilnadu Government Music College and Teachers' College, Music Academy**
**Time: 9:00 AM to 3:30 PM**

For information on schedule, events and registration, visit www.svanubhava.com

Registration open to all students of Classical Music and Dance

Also email us directly at svanubhava@gmail.com

Mātṛkā

Sponsors

AMM Foundation • Ashok Leyland • IndusInd bank • Kalki • Kingfisher Airlines • Nalli Kuppuswamy Chettiar • Saba Foundation • Sri Krishna Sweets • Shriram Group of Companies • C Srikanth • TAFE • The Hindu

Support - Sruti Magazine

சர்க்கரை உற்பத்தி குறைந்து வருவதால் சர்க்கரை விலை உயரும் அபாயம் ஏற்பட்டுள்ளது.

**- இந்தே பெரிய உண்மையைச் சொன்ன வாய்க்குச் சர்க்கரையை அள்ளிப் போடவா?**

''உ.பி.யில் என்ன நடக்கிற தென்றே மாயாவதிக்குத் தெரிய வில்லை'' - காங்கிரஸ் பொதுச் செய லாளர் திக்விஜய் சிங்.

**- மத்த மாநில முதல்வருங்களுக் கெல்லாம் அவங்கவங்க மாநிலத் துல இன்னா நடக்குதுன்னு தெரிஞ்சு கீச்சுடுச் சுங்களா?**

''சீனியர் சிடிஸன்ஸ''க்கு பிரணாப் முகர்ஜி அளித்துள்ள வருமான வரி உச்சவரம்பு குறைப்பு ஒரு விஸ்கி பாட்டில் வாங்கக்கூட உதவாது!'' - ஜஸ்வந்த் சிங்.

**- பெரிசுங்க பேர்ல பா.ஜ.க.வுக்கு எம்மாம் கரிசனம்? தமிழ்நாட்டுல டாஸ்மாக் முன்னாடி கூட்டம் போட்டா பா.ஜ.க., தேர்தல்ல ஜெயிச்சுடாது?**

''பொதுவாழ்க்கை என்பது புனிதமானது. அது என்றும் தூய்மையானதாக இருக்கவேண்டும் என்று நினைப்பவன் நான்'' - கருணாநிதி.

**- புனிதம்னா இன்னா? தூய்மைன்னா இன்னா...? அத்தையும் ரவ சொல்வீங்களா?**

# தெரியாமத்தான் கேட்கறேன்...

''இயற்கை எங்களை ஆசீர்வதித்துள்ளது. எனவே, தமிழ்நாட்டுக்குத் தண்ணீர் திறந்துவிடுவது சாத்தியமாகியிருக்கிறது'' - யெதியூரப்பா

**- லேட்டா திறந்துவிட்டாலும் லேட்டஸ்ட்டா பேசுறதுக்கு எங்க போய் ஆசீர்வாதம் வாங்கிக்கினு வந்தே?**

துவரம் பருப்பு; மூட்டைக்கு முந்நூறு ரூபாய் குறைவு.

**- மூட்டைக்குத்தானே விலை குறைஞ்சுக்குது? பருப்புக்கு இல் லியே...?**

**சுருளிப்பட்டி தைலா**

NOW ON SALE

Rs.10/- Only






Meet the President

Jetset to Dubai

August 2009

# GOKULAM

THE Magazine for Children

